# இருபதாம் நூற்றாண்டில் தமிழ் வளர்த்த பெரியோர்கள்

(பாகம் - 2)



முகமது ஆரிப் மியான்






தமிழ்நிலைப் பதிப்பகம்

புதுச்சேரி - 605 004

# இருபதாம் நூற்றாண்டில் தமிழ் வளர்த்த பெரியோர்கள்

(பாகம் 2)




முகமது ஆரிப் மியான்

தமிழ் நிலைப் பதிப்பகம்
5, 4-ஆவது குறுக்கு, மாரியம்மன் நகர்
புதுச்சேரி - 605 004.

முதற்பதிப்பு: டிசம்பர் 1997


முகமது ஆரிப் மியான் (17—6—1934)



விலை: **32-00**



கிடைக்குமிடம்:

தமிழ்நிலைப் பதிப்பகம்
5, 4-ஆவது குறுக்கு
மாரியம்மன் நகர்
புதுச்சேரி – 605 004.
பேசி: 41066

அச்சிட்டோர்:

சபாநாயகம் பிரிண்டர்ஸ்,
73-A, கீழரத வீதி, சிதம்பரம்.
பேசி 23040

## தந்துரை

### முனைவர் இரா. திருமுருகன். புதுச்சேரி,

இருக்கும் பொழுது எவ்வளவு பெரியவராய் இருந்தாலும், என்னதான் செயற்கரிய செய்தாலும் அவரைப் பாராட்டச் சிலருக்கு என்ன – பலருக்கு மனம் வராது. இவனைப் பாராட்டினால் மண்டைக் கனம் கொண்டு விடுவான் என்றோ, இவனைப் பாராட்டினால் நாம் இவனை விடத் தாழ்ந்தவனாக எண்ணப்படுவோம் என்றோ நினைக்கும் மனப்பான்மை இதற்குக் காரணமாயிருக்கலாம்.

இருக்கின்றவரோ இறந்து போனவரோ, இளையவரோ, மூத்தவ[...] இனம், மதம், கட்சிகளைச் சேர்தவரோ என்று [...] மனத்தடையுமின்றித், தகுதியா[...] பவரைப் பாராட்டும் இயல் புடைய[...]



வரலாறு எழுதும் ப[...]ம் தமிழரிடை இல்லாததை இந்நூலிற் பலவிடத்தும் இவர் சுட்டிக் காட்டி வருந்துவது, இதைப் படிக்கும் ஒவ்வொருவரையும் இனியாவது தன் வரலாற்றை எழுதத் தூண்டும்.

இக்கால இளைஞர் பலரும் அறியாமலிருக்கக் கூடிய திராவிடமணி, ச. து. சு. யோசியார், அ. மாதவையா, பாண்டித்துரைத் தேவர், த. உமாமகேசுவரனார் போன்றோர் வரலாறுகளையும் அரிதின் முயன்று தேடித் தந்துள்ள ஆசிரியர் பாராட்டுக்குரியவர்.

72 பேரின் வரலாறுகளை ஓர் அறையில் உட்கார்ந்த படி எழுதிவிட முடியாது எத்தனையோ காலம் முயன்று, எத்தனையோ இடங்களுக்குச் சென்று, எத்தனையோ பேரைக்கண்டு பேசி, எத்தனையோ நூல்களை ஆய்ந்து தரவுகளைத் தொகுக்க வேண்டியிருக்கும். அத்தகைய தாளாண்மை ஆசிரியர்க்கு உள்ளமையை இந்நூல் எடுத்துக் காட்டுகிறது

'குட்டையான, பருமனான உடம்பு; தலையில் உச்சிக் குடுமி, நீறுதுதைந்த நெற்றி - இவர் கி. வா. ஜ.

கட்டையான உருவம்; நெற்றியில் திருநீறு; முழுக்கைச் சட்டை, கீழே வெள்ளை வேட்டி, மேட்டிலிருந்து கீழ் நோக்கி வரும் நடை; சாந்தம் தவழும் மொழி; பணிவும் பண்பும் தரும் தோற்றம் — இவையே க. வெள்ளை வாரணம் பிள்ளை' என்பன போன்று சுவையாக இயன் மொழியும் (வருணிக்கும்) திறம் கொண்டு தமிழ்ச் சான்றோர் பலரை நம் கண்முன் கொண்டு வந்து நிறுத்துகிறார்.

முதல் தொகுதியில் 74 பேரும் இந்தத் தொகுதியில் 72 பேருமாகத் தமிழ் வளர்த்தோர், வளர்ப்போர் ஆக 46 பேரின் சுருக்கமான, இன்றியமையாத வாழ்க்கை வரலாற்றுச் செய்திகளைத் தெளிவாகவும் சுவையாகவும் இளையோரும் பயன் கொள்ளும் எளிய நடையிலும் எழுதியிருக்கிறார்.

இத்தொகுதிகளில் அறிமுகப் படுத்தப்பட்டோர்போல் இன்னும் தமிழ் கூறு நல்லுலகில் எத்தனையோ பேர் இருகிறார்கள். தொடர்ந்து அவர்கள் வரலாற்றையெல்லாம் இதுபோன்று தொகுத்து வெளியிடுவார் என்று எதிர் பார்க்கிறேன்.

'பத்தோடு பதினொன்று அத்தோடு இது ஒன்று' என்று இல்லாமல் தமிழில் இல்லாத குறையை நிறைவு செய்யும்

நூலாக இதனைப் படைத்தளிக்கும் ஆரிபுமியானுக்கு என்றும் தமிழுலகம் நன்றிபாராட்டும். இத்தகைய தொகுதிகள் பல தொடர்ந்து வந்தால், இருபதாம் நூற்றாண்டின் இலக்கிய வரலாறு இவ்வாசிரியர்க்குத் தக்க இடமளிக்கும்.

இவ்வரிய தமிழ்த் தொண்டினை மேற்கொண்டிருக்கும் ஆரிவுமியான் 'தமிழறிஞர் வரலாறு காத்த தாளாளர்' என்ற சிறப்புடன் இன்று போல் என்றும் தமிழுலகின் பாராட்டுக் குரியவராய் இயங்குவார் என்று நம்புகிறேன்.

62, ஏழிசை சூழல்
மறைமலை அடிகள் சாலை
புதுச்சேரி

இரா. திருமுருகன்

27—10–97

# முன்னுரை

இந்த நூற்றாண்டின் தமிழுக்குத் தொண்டு செய்த பெரியோர்களைப் பற்றிய குறிப்புகள் தொகுக்கப்படுதல் வேண்டுமெனும் எண்ணம் எனக்குப் பிறந்தது அம்முயற்சியின் விளைவாக எழுபத்து நன்றாகு தமிழ்ப் பெரியார்களின் வாழ்க்கைக் குறிப்புகளைத் தொகுத்து "இருபதாம் நூற்றாண்டில் தமிழ் வளர்த்த பெரியோர்கள் என்னும் தலைப்பில் ஒரு நூல் வெளியிட்டேன் (1995) அந்த நூலுக்கு நல்ல வரவேற்பு இருந்தது.

இப்பொழுது வெளிவரும் இத்தொகுப்பில் மேலும் 72 பெரியோர்களைப் பற்றிய வாழ்க்கைக் குறிப்புகள் தொகுக்கப் பட்டுள்ளன. பொதுவாக வரலாறு எழுதும் பழக்கம் நம் தமிழரிடை அறவே இல்லை. அதனால் நம் பெரியோர்களின் உண்மையான வரலாறுகளை நாம் தெரிந்து கொள்ள முடியாமற் போயிற்று. இப்பொது இவர்தம் வாழ்க்கை வரலாறுகள் தொகுப்பது ஒரு பொறுப் புடைய பெரிய வேலையாகும். தமிழின் ஒவ்வொரு துறைக்கும் பாடுபட்டோர் நூற்றுக் கணக்கானவர் இந்த நூற்றாண்டில் வாழ்ந்தனர்; வாழ்ந்து வருகின்றனர். புதினங்கள் படைத்தவர், சிறுகதை எழுத்தாளர், நாடக ஆசிரியர் இசைப்புலவர் –தமிழ்நடிகை, நடிகர்கள், கவிஞர்கள் இப்படி ஒவ்வொரு துறையிலும் பலராகப் பல்கி விட்டனர் அவர்களைப் பற்றிய விவரங்கள் தொகுக்கப்படுதல் வேண்டும் இதற்குப் பலநாள் பலருடைய உழைப்புத்தேவை தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம், அரசு ஆகிய இவை இதற்குரிய ஏற்பாடுகளைச் செய்ய முன்வருதல் வேண்டும்.

இவ்வாறு தொகுப்பதில் முதிர்ந்த வயதுடையவர் இளைய வயதினர் என்று பாராமல் அனைவருடைய தமிழ்த் தொண்டும் மதித்துப் பதிவு செயப்படுதல் வேண்டும்.

நூல்கள் எழுதாமல் தமிழ் வளர்ச்சிக்குத் துணை நின்றவர், புரவலர்கள் போன்றோர் பற்றிய செய்திகளும் தொகுக்கப் படுதல் வேண்டும். இப்படிப்பட்டோர் பலர் உண்டு. விழிப்புணர்ச்சியுள்ள இந்தக் காலத்திலும் நாம் செய்யத்தக்கன செய்யாமை பெரும் குறைபாடுடையதாகும். உண்மையான தமிழார்வம் உடையவர்கள் உடனே இப்பணியில் இறங்குவாராக.

விரிவான வரலாறு எழுதுதல் இயலாதாயின் தமிழ்த் தொண்டாற்றியோர் பற்றிய சிறுகுறிப்புகளேனும் எழுதுதல் வேண்டும் இந்த நூலில் அம்முயற்சியே மேற்கொள்ளப் பட்டுள்ளது. விடுபட்டுப் போனவர் பலராக இருக்கின்றனர். ஆகூழிருப்பின் அவர்களைப் பற்றிய செய்திகள் தருவதற்கு முயல்வேன்.

“இருபதாம் நூற்றாண்டில் தமிழ் வளர்த்த பெரியோர்கள்” முதல் பாகத்திற்கு அணிந்துரை அளித்த முனைவர் பெரும்புலவர் இரா. திருமுருகனே இப்பகுதிக்கும் அணிந்துரை அளிக்கவேண்டுமென்னும் அவா எனக்கு உண்டு. அதற்குக் காரணங்கள் இரண்டு ஒன்று, முனைவர் திருமுருகன் அவர்தம் தமிழ்ப் புலமையால் தமக்கு ஒப்பாகும் மிக்காரும் இல்லாமல் வளர்ந்திருப்பவர். இரண்டு. இந்த இரண்டாம் பாகத்தில் எடுத்தோப்பட்ட பல அறிஞர்களை யும் நன்கு அறிந்தவர். எனது விருப்பத்தை நிறைவேற்றித் தந்த திருவாளர் முனைவர். இரா. திருமுருகனாருக்கு நன்றி சொல்லிக்கொள்கிறேன்.

இன்னும் வரலாற்றுச் சுவடிகளுக்குள் இடம்பெறாத பெரியோர்கள் பலராக உள்ளனர் அவர்களைப் பற்றியும்

எழுத இறையருளுக்காக இறைஞ்சுகிறேன். இந்நூலின் தேவையை உணரும் தமிழன்பர்கள், கல்வி நிறுவனங்கள் எனக்கு ஆக்கமும் ஊக்கமும் அளிக்குமாறு வேண்டிக் கொள்கிறேன்.

இந்நூலை அழகிய முறையில் வடிவமைத்து அச்சிட்டுத் தந்த தில்லையம்பதி சபாநாயகம் அச்சகத்தாருக்கு என் நன்றி.

3-12-97 முகமது ஆரிப் மியான்.




## உள்ளே...

பக்க எண்

# இருபதாம் நூற்றாண்டில் தமிழ் வளர்த்த பெரியோர்கள்

## கி. வா. ஜகந்நாதன்

கி. வா. ஜ என அழைக்கப்படும் கி. வா. ஜகந்நாதன் டாக்டர் உ. வே. சாமிநாதையரின் தலை மாணாக்கர் ஆவர். தமிழிலக்கியங்களிலும் இலக்கணத்திலும் பெரும் புலமை வாய்ந்தவர்.

குட்டையான பருமனான உடம்பு தலையில் உச்சிக் குடுமி. நீறு துதைந்த நெற்றி. இவர் கி வா. ஜ. சங்க இலக்கியங்களை மக்கள் விரும்புமாறு எளிய இனிய மொழியில் பல நூல்களாகத் தந்தார். ''தமிழ் வையை,'' புதுவெள்ளம்! போன்றன அத்தகையன. கலைமகள் என்னும் இதழினைப் பல்லாண்டு நடத்தியவர். அவ்விதழில் வினா-விடை என ஒரு பகுதியைத் தொடங்கி வாசகர்களுக்கு இலக்கண இலக்கியங்களில் ஏற்படும் ஐயங்களைக் களைந்து வந்தார். சமயம், தத்துவம் போன்ற வினாக்களுக்கும் விடைகள் கிடைத்தன. அவ்வினா - விடைகள் தொகுக் கப்பட்டு 'விடைகள் ஆயிரம்' என்ற நூல்வடிவில் வெளியிடப்பட்டுள்ளது. பன்னிரு திருமுறைகளிலும் சைவ சித்தாந்த சாத்திரங்களிலும் பேராற்றல் பெற்றவர் நல்ல

தமிழ் நாவீரர். பல கருத்தரங்குகளையும் பட்டிமன்றங் களையும் அலங்கரித்தார். சிறந்த கவிதையாற்றல் உடைய இவர் 'நீங்களும் கவி பாடலாம்' என்னும் நூலின் மூலம் யாப்பிலக்கணத்தை எளிமையாக விளக்கியுள்ளார். நகைச் சுவையோடும் பேசும் இவர் பிறர் வேட்ப மொழியும் திறத்தினர்.

இவர் ''அன்பின் உருவம்'' 'ஒன்றே ஒன்று' போன்று பல நூல்கள் எழுதியவர்.

## வ. சுப. மாணிக்கம்

பெருந் தமிழ்ப் புலவர்; தமிழ் மொழிக் காவலர்; தனித் தமிழ் ஆர்வலர். மதுரைக் காமராஜர் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தராக இருந்தவர். சங்கத் தமிழில் சிறப்புடைய வித்தகர். கொள்கை மறவர்; பன்னூலாசிரியர்.

திருக்குறளைச் சிறந்த முறையில் ஆராய்ந்து வள்ளுவம் என்னும் நூலினை வடித்தவர். தொல்காப்பியத்தினைத் தோள் மேல் வைத்துப் போற்றும் மாண்பினர். வ. சுப. மாணிக்கம் இருபதாம் நூற்றாண்டில் தலை சிறந்து விளங்கிய ரா. ராகவய்யங்கார், பண்டிதமணி கதிரேசர் செட்டியார் போன்ற பெரும் புலவர்களில் ஒருவராக வைத்துப் போற்றத்தக்கவர். முனைவர் சுப. மாணிக்கம் 'காப்பியப் பார்வை'' ''சங்க நெறி'' ''திருகுறட் சுடர்'' முதலான நூல்களும் படைத்துள்ளார். வ. சுப. மாணிக்க னாரின் சொல்லாக்கம் என்பது மற்றொரு படைப்பு.

மழலையர் பள்ளிகளில் (LKG, UKG) தமிழ் சொல்லித் தரப்படாத நிலை இன்று தமிழக மெங்கும் காணப்படுகிறது. இந்நிலை நீடித்தால் 'மெல்லத் தமிழினிச் சாகும்' என்றுதான் சொல்லத் தோன்றுகிறது. இதனை

மதுரையில் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாட்டில் துணிந்து எடுத்துரைத்தார். தாய்மொழியாகிய தமிழைச் சொல்லிக் கொடுக்காத இழிநிலையைச் சாடினார். நம் வ. சுப. மாணிக்கனார்.

வ. சுப. மாணிக்கம் அண்ணாமலைப்பல்கலைக் கழகத்திலும் காரைக்குடி டாக்டர் அழகப்பா செட்டியார் கல்லூரியிலும் இருந்து நற்றமிழ் வளர்த்தார். கல்லூரிகளுக்கும் பல்கலைக் கழகங்களுக்கும் தமிழை வளர்க்கும் பொறுப்பு உண்டு என்பதை நிறுவியவர் வ சுப. மாணிக்கனார் ஆவர்.

## ப. ஜீவானந்தம்

அஞ்சா நெஞ்சமும் கொள்கையில் அழுத்தமான பிடிப்பும் கொண்டவர் ப. ஜீவானந்தம் ஆவர். ப. ஜீவானந்தம் சிங்கம் கர்ஜிப்பது போல் பேசுவார். முகத்தில் அடர்த்தியான மீசை அவருக்கு ஓர் எடுப்பான தோற்றத்தைத் தந்தது. மார்க்சிய கொள்கையில் நின்ற இவர் கம்பனையும் பாரதியையும் அக்கண்ணோடு பார்த்து மக்களிடையே அக்கொள்கைகளைப் பரப்பினார். அனைத்து மக்களையும் சமமாகக் கருதிய ஜிவா-ஆம் இவர் இப்படித் தான் அழைக்கப்பட்டார்-மிக எளிய வாழ்க்கை வாழ்ந்தார். சாகும் வரை வறுமை அவரை விட்டுப் பிரியாமலிருந்தது.

ஜீவா ஒரு சிறந்த கவிஞர்; உரைநடை எழுத்தாளர்; இதழாசிரியர். இவரது பேச்சில் எரிமலை வெடிக்கும்; நாட்டு விடுதலைக்குப் பாடுபட்ட ஒரு எரிமலைத் தியாகி, 'ஜனசக்தி' என்பது பொதுவுடைமைக்காரர்களால் நடத்தப் பட்ட ஒரு நாளிதழ். ஜீவா அப்பத்திரிக்கையின் ஆசிரியரா கவும் இருந்தார். தமிழக எல்லைப் பாதுகாப்புப்

போராட்டத்தில் சிலம்புச் செல்வர் ம. பொ. சியுடன் சேர்ந்து பெரும் தொண்டாற்றினார். வடக்கே திருத்தணிகை தெற்கே பீர்மேடு, நெய்யாற்றங்கரை முதலான பகுதிகள் தமிழ் நாட்டோடு இணைக்கப்பட்டன.

ஜீவா தொடக்கக் காலத்தில் தனித் தமிழ் ஆர்வல ராகவே இருந்தார். வ.ரா. என்பவர் ஜீவாவின் நெருங்கிய நண்பர் இவர்தான் ஜீவாவின் தனித்தமிழ் ஆர்வத்தைப் போக்கினார் என்பர் "ஜீவா வாழ்க்கை வரலாறு" பால தண்டாயுதம் எழுதியிருக்கிறார். ஜீவா குமரிமாவட்டக் காரர் என்று தெரிய வருகிறது.

ஜீவா பல நூல்களை எழுதியிருக்கார். ஜீவாவின் பாடல்கள், இலக்கியச் சுவை, பாரதி வழி புதுமைப் பெண், சோஷலிஸ்ட் தத்துவங்கள். மதமும் மனித வாழ்க்கையும் மொழியைப் பற்றி ஜீவா போன்றவை அவர்தம் படைப்புகள்.

## ஔவை சு. துரைசாமிப் பிள்ளை

ஔவை சு. துரைசாமிப் பிள்ளை ஒரு சிறந்த தமிழ்த் தொண்டாற்றிய பெரியார் ஆவர். தென்னார்க்காடு மாவட்டம் ஔவையார் குப்பம் என்னுமிடத்தில் பிறந்தார். அதனால் ஔவை சு. துரைசாமிப் பிள்ளை என அறியப் பட்டார். வட ஆர்க்காடு மாவட்டத்தில் தமிழாசிரியராகப் பணியைத் தொடங்கினார். இவரது தமிழ்ப் புலமையால் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் விரிவுரையாளராக நியமிக்கப் பட்டார்.

சைவசித்தாந்தத்தில் வல்லவராகத் திகழ்ந்தார். துரைசாமிப் பிள்ளை சிறந்த பேச்சாளர். இவர் பிற் காலத்தில் மதுரைத் தியாகராயச் செட்டியார் கல்லூரி

யில் கடைசி வரை பணியாற்றினார். இவர் சங்க இலக்கியப் புலமை வாய்ந்தவர். எனவே பல சங்க நூல்களுக்கு உரை எழுதினார். பதிற்றுப் பத்து புறநானூறு, ஐங்குறுநூறு, நற்றினை ஆகிய இவற்றுக்கு அவர் இனிய உரை எழுதி யுள்ளார். இவரை உரையாசிரியர் என்றும் உரைவேந்தர் என்றும் போற்றிப் புகழ்ந்தனர். தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தராக விருந்த ஔவை. து. நடராஜன் ஔவை சு. துரைசாமிப் பிள்ளையின் செல்வப் புதல்வராவார்.

ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை ராமலிங்க வள்ளலார் தம் 'அருட்பா' ஆறுதிருமுறைக்கும் அரிய உரை எழுதியிருக் கிறார். ந. மு. வேங்கடசாமி நாட்டார் மணிமேகலையில் பின் சில காதைகளுக்கு உரை எழுதவில்லை என்றும் துரை சாமிப் பிள்ளை அதனை எழுதி முடித்தார் என்றும் சொல்லுவர்.

சீத்தலை என்பது ஒரு ஊரென்றும் அவ்வூர்காரர் சாத்தனார் என்றும் எனவே அவர் சித்தலை சாத்தனார் என அழைக்கப் பட்டார் என நிறுவினார். பல்கலைக் கழக மானியக்குழு பணித்தவாறு தமிழ் நாட்டு ஊர்ப் பெயர்களை ஆராய்ந்து ஆறு தொகுப்புகள் வெளியிட்டார். மேலும் கல் வெட்டு ஆராய்ச்சியில் இரண்டாயிரம் ஊர்களைப் பற்றிய விவரம் சேகரித்தார்.

துரைசாமிப் பிள்ளை 'சித்தாந்த கலாநிதி' என அழைக்கப் பட்டார். 'ஞானாமிர்தம்' என்ற நூலுக்குப் பழைய உரையொன்று உண்டு. அதற்கு விளக்கக் குறிப்புகள் எழுதினார். இஃதொரு சைவ நூல் என்பது நோக்கத் தக்கது.

# ந. மு. வேங்கடசாமி நாட்டார்

பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார் இந்த நூற்றாண்டில் வாழ்ந்து பல சங்க இலக்கியங்களுக்கும் காப்பியங்களுக்கும் உரை எழுதியவர். இவர் ஒரு பெரும் தமிழ்ப் புலவர். தஞ்சை மாவட்டத்தில் நடுக்காவேரி என்னும் ஊரில் பிறந்தவர். 'நாட்டார் ஐயா' எனப் பய பக்தியோடு பலரும் அழைத்தனர். நாட்டார் என்றால் அக்காலத்தில் நாவலர் பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்களையே குறித்து நின்றது.

கேளாரும் வேட்ப மொழியும் பேச்சாற்றல் வாய்ந்தவர். யாழ்ப்பாணத்து மக்கள் இவரது நாவன்மையைப் பாராட்டி 'நாவலர்' என்னும் பட்டம் சூட்டினர். நாட்டார் ஐயா அவர்தம் சொற்பொழிவு பாட்டிசைப்பது போல இனிமை யாக அமைந்திருந்தது என்பர். நயத்தக்க நாகரிகம் உடையவர்.

பலகாப்பியங்களுக்கும் சங்கப் பாடல்களுக்கும் பழைய உரைகள் சிலவிருந்தன. ஆனால் அவை முழுமையாக அமைய வில்லை. எனவே நாட்டார் அவர்கள் சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காப்பியங்களுக்கு உரைகள் எழுதினார். எளிமையும் தெளிவும் கொண்டவை அவ்வுரைகள். அரிய விளக்கங்களும் தந்தார். அவ்வாறே அகநானூற்றுக்கும் சிறந்த உரை எழுதினார். சிலப்பதிகார உரை 1942 ல் வெளியானது. நாடு இவரது தமிழ்ப் புலமையைக் கண்டு கொண்டது.

வேங்கடசாமி நாட்டார் அவர்கள் திருச்சியில் ஒரு கல்லூரியில் முதலில் பணி ஏற்றார். பின்னர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் விரிவுரையாளராக இருந்தார்.

கரந்தைப் புலவர் கல்லூரியும் இவரது தொண்டினைப் பெற்றது.

இவர் பல கட்டுரைகள் வரைந்தார். அவை நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் ஆய்வுக் கட்டுரைகள் என்னும் பெயரில் தொகுக்கப் பட்டுள்ளன. இத்தொகுதி 1984 ல் நடைபெற்ற நாட்டாரது நூற்றாண்டு விழாவின் போது வெளியிடப்பட்டது. மேலும் கபிலர் ஆராய்ச்சி, சோழர் சரித்திரம், நக்கீரர், வேளிர் வரலாற்றின் ஆராய்ச்சி போன்ற நூல்களும் இவரால் எழுதப்பட்டன. திருவிளை யாடல் புராணத்திற்கு உரையும் எழுதியுள்ளார்.

நாட்டார் பெயரில் தமிழ்ப்புலவர் கல்லூரி ஒன்று தஞ்சையில் இயங்கி வருகிறது.

## திருச்சி ரசூல்

திருச்சி குலாம் ரசூல் என்பது இவரது முழுப்பெயர். தமிழில் இலசுாமியக் கொள்கைகளை விளக்கிப் பல நூல்கள் எழுதியவர் 'ஷாஜஹான்'என்னும் இதழ் நடத்தி ஐம்பதுகளில் இசுலாமிய இளைஞரிடைப் புத்துணர்வை வளர்த்தவர். தமிழ் முஸ்லிம்களிடைபழக்கத்தில் இருந்து வரும் பல அறிவுக் கொவ்வாத அனாச்சாரங்களைத் துணிந்து கண்டித்தார். தமது ஷாஜஹானில் தொடர்ந்து அவற்றைச் சாடி எழுதினார். இந்நூலாசிரியர் அப்பத்திரிக் கையின் கட்டனம் செலுத்தும் உறுப்பினராக இருந்தார். அவ்விதழ்களை வரவழைத்துப் பிறருக்கும் வழங்கிப் படிக்கும் படி தூண்டியது இங்கே நினைவு கூரலாம். ஐந்தாவது வகுப்பு வரை கூட பள்ளிகளில் கல்வி பெறாத குலாம் ரசூல் நூறு நூல்களுக்கு மேல் எழுதிய நூலாசிரியர் என்பது வியப்பிற்குரியது தானே?

தமிழ் எழுத்தாளர்களில் ஒரு புரட்சி செய்தவர் குலாம் ரசூல். அவர் தொடர்ந்து நாற்பது ஆண்டுகளாக நாட்குறிப்பு எழுதி வருகின்றார். அவர்தம் வளர்ச்சியையும் பெற்ற வெற்றிகளையும் பட்ட இன்னல்களையும் அக்குறிப்புகள் நமக்கு எடுத்துக் காட்டுகின்றன படைப்பாளன் நாட்குறிப்பு எழுதுவது ஒரு புதுமையாகும் இவர் அறபி, தமிழ், உருது, ஆங்கிலம், அறபுத் தமிழ் ஆகியவற்றில். புலமை வாய்ந்தவர்

விகடத் துணுக்குகள் எழுதுவதில் ஆர்வம் காட்டிய இவர் பின்னர் சிறுகதைகள் எழுதத் தொடங்கினார். ஆனந்தஜோதி, சுதேசமித்திரன், சந்திரோதயம் போன்ற பத்திரிக்கைகள் அவற்றை ஏற்று வெளியிட்டன. தாருல் இசுலாம், கதிர், இளம்பிறை போன்ற முசுலிம்கள் நடத்திய இதழ்களும் இவரது எழுத்துகளை வரவேற்று வெளியிட்டன.

இவர் நடத்திய 'ஷாஜஹான்' இதழில் பல படங்களும் – கார்ட்டூன்களும் இடம் பெற்றன 'என்னைக் கேளுங்கள்' எனும் பகுதியில் மிஸ்டர் கொட்டாப்புளி என்னும் பெயரில் வாசகர்கள் கேட்கும் எல்லாவகை கேள்விகளுக்கும் நறுக் கென்றும், விருவிருப்புடனும் தெளிவாகவும் விடை தந்து வந்தார்.

மேலை நாட்டு நல்லறிஞர்தம் சாஸ்திரங்களைத் தமிழுக்கு அளித்துப் புகழெய்தினார் இவர் நூற்றுக்குமேல் நூல்கள் எழுதியுள்ளார். அவற்றுள் பல நூல்கள் மொழி பெயர்ப்பு நூல்களாம். மௌலானா அஷ்ரஃப் அலிதானவி என்னும் மாமேதையின் உருது நூல்கள் பல தமிழில் மொழி பெயர்ப்புப்பட்டன தொழுகை விளக்கம், இறை வழங்கும் இனிய மருந்து, பர்தா எங்கே? மார்க்கச் சட்டங்கள் என்பன அவற்றுள் சிலவாகும். அண்ணல் நபி(ஸல்) நபிமார்கள் சரிதை, குழப்பவாதிகள் ஜாக்கிரதை தீரர் திப்பு, கல்வியின் சிறப்பு, முஸ்லிம்கள் சீரவழிவதேன் போன்ற

நூல்கள் ஆசிரியருக்கு முழுத்திருப்தி தந்த நூல்களாகக் கொள்ளலாம்.

இரு எலும்புக் கூடுகள் (சிறுகதைத் தொகுப்பு)
பாழடைந்த பள்ளிவாசல் (சிறுகதைத் தொகுப்பு
ஈத் முபாரக் (சிறுகதைத் தொகுப்பு)
குல்ஹமீது (நாவல்)

போன்ற பல்வேறு நூல்கள் எழுதிச் சமுதாய முன்னேற்றத்திற்கு உதவிய குலாம் ரசூல் எடுபத்திரண்டு வயதிலும் எழுதிக் கொண்டே இருக்கிறார். இஸ்லாமிய சன்மார்க்கத்தைத் தமிழருக்கும் பிறருக்கும் விளக்கித் தமிழ் மொழிக்குப் பெருந்தொண்டாற்றி யிருக்கிறார்.

மேல்நாட்டைப் போல் எழுத்தாளர்களைப் பற்றிய வரலாற்று நூல் இங்கு எழுதப் படுவதில்லை. இலங்கையைச் சார்ந்த ''மானா மக்கின்'' அக்குறையைப் போக்கித் திருச்சி குலாம் ரசூலைப் பற்றிய சுருக்கமான வரலாறு எழுதியிருக்கிறார்,

## அகராதிக் கலைஞர் மு. சதாசிவம்

டாக்டர் அ. சிதம்பர நாதச் செட்டியாரிடம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் கற்றவர் ஆங்கிலத்திலும் வல்லவர். பிரஞ்சு மொழியும் தெரிந்தவர்.

குட்டையான கனத்த உருவம்; நெற்றியில் ஒரு சந்தனப் பொட்டு; நீறு துதைந்த நெற்றி; சிரித்தமுகம்; சிந்தனை நிறைந்த கண்கள்; இவை மு. சதாசிவம். அன்பும் எளிமையும் இவரது இயல்பான பண்புகள். படிப்பும் எழுத்தும் இவருக்கு இரு கண்கள்.

மு. சதாசிவம் தமிழுக்கு அரிய தொண்டு செய்திருக் கிறார். வகைக்கொரு அகராதி பெற்றிருக்கின்றன ஆங்கிலம்

முதலான மொழிகள். அகராதிகளும் பேரகராதிகளும் அம் மொழிகளில் பெருகி வருகின்றன. கற்போருக்கும் ஆராய்ச்சியாளர்களுக்கும் அவை பேருதவி புரிகின்றன. அதனால் அம்மொழிகள் செழித்து வளருகின்றன. வீரமா முனிவர் தமிழில் முதன் முதலாக 'சதுரகராதி' என வொன்று தொகுத்தார் அறிவு எரிமலை போல் வெடித்துப் பரவுவதைப் போல் பெருகிவரும் இக்கால அறிவியல் வளர்ச்சிக்கும் மொழி வளர்ச்சிக்கும் ஆங்கிலத்தில் இருப்பது போல் வகை வகையான அகராதிகள் தமிழில் தேவைப்படு கின்றன. ஒரு படைப்பாளரின் படைப்புகளுக்கும் அங்கு அகராதிகள் உள்ளன ஆனால் தமிழ் அத்தகு அகராதி களைப் பெற்றிருக்வில்லை. மு. சதாசிவம் அத்துறையில் உழைத்துப் பல அகராதிகளைப் படைத்து வருகிறார். அடுக்கு மொழி அகராதி, பழமொழி அகராதி முதலியன அவற்றுள் சில.

## பேராசிரியர் அப்துல் கறீம்

சித்தையன் கோட்டையில் பிறந்த பேராசிரியர் அப்துல் கறீம் அவர்கள் அதிராம்பட்டினம் காதிர் முகயித்தீன் கல்லூரியின் முன்னாள் முதல்வர் ஆவர். அமைதியும் ஆழமும் உடைய பண்பாளர். இசுலாமியத் தமிழுக்குத் தொண்டாற்றிவரும் பெரும்புலவர். இசுலாமிய மார்க்க ஞானமும் பேணுதலும் உடையவர். நல்ல பேச்சாளர். அனவரதமும் உழைக்கும் பெற்றியர். செம்மேனி அழகர். இசுலாமியத் தமிழிலக்கியக் கழகத்தின் துணைத் தலைவர். தமிழக அரசின் சிறந்த பேராசிரியர் விருது பெற்றவர். பழகுதற்கு இனியவர்.

சென்னை சீதக்காதி அறக்கட்டளை அப்துல் கறீம் எழுதிய இசுலாமும் மத நல்லிணக்கமும் என்னும் நூலுக்கு

இருபதாயிரம் பணமுடிப்புத் தந்து சிறப்பித்துள்ளது. பேராசிரியர் அவர்கள் பல நூல்களை எழுதித் தமிழ் மொழிக்கு அளித்துள்ளார். இசுலாமும் தமிழும், சீறாப் புராணத் திறனாய்வு, இன்றைய தீமைகளும் இசுலாமியத் தீர்வுகளும், பாரதிதாசன் பாட்டுத் திறன் கண்ணதாசன் கவிதைத்திறன், முதலான பல நூல்கள் இயற்றியுள்ளார்.

இவர் பல இசுலாமிய நூல்களைப் பதிப்பித்துள்ளார். இஃது இசுலாமியத் தமிழிலக்கியத்துக்கு இவர் இயற்றிய அரிய காலத்தால் வேண்டப் படக் கூடிய தொண்டாகும். சேகனாப் புலவரியற்றிய ''குதுபு நாயகம்'' பதுறுத்தீன் புலவர் பாடிய ''முகியத்தின் புராணம்'' வண்ணக் களஞ்சியப் புலவரியற்றிய குதுபுநாயகம் போன்ற நூல்கள் இவரால் பதிப்பிக்கப்பட்டன.

## தொல்காப்பியச் செம்மல் மயிலம் ஆ. சிவலிங்கனார்

செந்தமிழ்த் தொண்டர்கள் வரலாறு நம்மவர்களால் எழுதப்படுவதே இல்லை. இத்தொண்டர்களில் இமயமென உயர்ந்த நல்லறிவாளர் சிலரது வரலாறாவது எழுதப் படுதல் இன்றியமையாதது. வரலாற்றை எழுதிக் காக்காத குறையினாலன்றோ அணிலாடு முன்றிலார், செம்புலப் பெயல் நீரார்; காக்கை பாடினியார் போன்ற சங்கப் புலவர் தம் இயற்பெயர்கூட நமக்குத் தெரியாமல் போய் விட்டது.

வரலாறு எழுதிப் போற்றத் தகுந்த தமிழ்ப் புலவர் தொல்காப்பியச் செம்மல் ஆ. சிவலிங்கனார் ஆவார். ஞானியாரடிகளிடமும் ஞானியார் மடாலயத்தில் ஆசிரியராகப் பணியாற்றிய உருத்திரசாமி ஐயர் என்பாரிடமும் தமிழ் கற்றவர். (ஐயர் என வீரசைவ

மரபினரைக் கூறுவது வழக்கு). திருவையாறு அரசர் கல்லூரியில் வித்துவான் பட்டமும் பெற்றார்.

நெல்லை வீரவநல்லூர் நடுநிலைப் பள்ளியில் ஓராண்டுக் காலம் ஆசிரியப் பணிபுரிந்த சிவலிங்கனார் மயிலம் சிவ ஞான பாலைய சுவாமிகள் தமிழ்க் கல்லூரியில் 1942 முதல் 1971 வரை விரிவுரையாளராகவும் கல்லூரி முதல்வராகவும் பணியாற்றினார். 1973ல் நாமக்கல் மோகனூரில் தமிழ்க் கல்லூரி முதல்வராக இருந்தார். அடுத்து ஞானியார் மடாலயத்தில் ஆறு ஆண்டுகள் மாணவர்களுக்குப் பாடம் சொல்லிவந்த இவர் 1979 முதல் 1987 வரை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் தமிழ்த் தொண்டு செய்தார். தொல்காப்பிய உரைவளப் பதிப்பு அலுவலராக இருந்து தொல்காப்பிய உரை வளத்தை 23 பகுதிகளாக வெளிவர உதவினார்.

சிவலிங்கனார் பல ஆராய்ச்சி நூல்களும் கட்டுரை நூல்களும் எழுதினார். அகத்தியர்கள், எட்டாந் திருமுறை, மூலன் தமிழ், தொல்காப்பியர் கூறும் உள்ளுறையும் இறைச்சியும் மாணிக்கவாசகர் காலமும் சமயமும் என்பன ஆய்வு நூல்களில் சில. மாணிக்கவாசகர் வீரசைவ சமய மரபினர் என்பது சிவலிங்கனார் கருத்தாகும்.

சிலம்பு மணிகள், பெரிய புராணப் பெண்மணிகள், திருவள்ளுவரைப் பற்றி...! என்பன கட்டுரை நூல்களில் சிலவாகும். இவர் உரையாசிரியராகவிருந்து சிவஞான பாலைய தேசிகர், நெஞ்சுவிடு தூது, பெரியநாயகி அம்மை கலித்துறை, திருவெங்கைக் கலம்பகம், திருவெங்கை உலா ஆகிய நூல்களுக்கு அரிய உரை எழுதியிருக்கிறார். கவி இயற்றும் ஆற்றலில் சிறந்தவராகிய தொல்காப்பியச் செம்மல் மயிலைக் களவியல் மாலை, பாலசித்தர் பாமாலை மயிலைக் கார்த்திகைக் கதம்பம், பொம்மபுரப் புராணம்

# தி. வே. கோபாலய்யர்

ஆராய்ச்சியாளர்கள் எழுத்தாளர்கள் வேண்டிய மேற்கோள்களுக்கு மேற்கோள் நூலகம் (Reference Library) சென்று அல்லல்பட வேண்டாம். உடனுக்குடன் செய்திகளைத் தரும் கணினி போலப் புதுவையில் தி. வே. கோபாலய்யர் என்னும் பெருந்தமிழ்ப் புலவர் இருக்கின்றார் புதுச்சேரியில் பிரஞ்சு இந்தியக் கலைக் கழகத்தில் எழுபது ஆண்டுகளைக் கடந்தும் தமிழ்ப் பணி ஆற்றும் திரு கோபாலய்யர் என்னும் தமிழ்க் கடல் மூளை கணினி போல வேலை செய்கிறது. கம்பராமாயணம், சீவக சிந்தாமணி தேவாரப் பதிகங்கள் நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரியர் தம் உரைப் பகுதிகள், இலக்கண நூற்பாக்கள் முதலானவை கடல்மடை திறந்தாற்போல அவர் வாயினின்றும் பெருக்கெடுக்கும். புத்தகங்களைத் தேடி அலைய வேண்டாம். அவரது மூளை தமிழிலக்கிய இலக்கணங்களைத் தேக்கி வைத்திருக்கிறது. இந்த மூளையைக் கணினி மூளை (Computer Braiu) எனச் சொல்வது பொருத்தமாகும்.''

திருவையாற்றில் வேங்கடராமையர்-லட்சுமி அம்மாள் ஆகியோருக்கு 22—11—1926-ல் பிறந்த இவர் ஆரம்பக் கல்வியையும் கல்லூரிக் கல்வியையும் திருவையாற்றிலேயே முடித்துக் கொண்டார். வித்துவான் (1945) பி.ஒஎல் (1951) பண்டிதம் (1953) பி.ஓல் ஹானர்ஸ் (1956) ஆகிய பட்டங்களைத் தனித் தேர்வாளராகப் படித்துத் தேறிய இவர் அனைத்துத் தேர்வுகளிலும் பரிசுகள் பெற்றார். தேர்வுகளில் முதன்மையாக வந்து பரிசுகளைப் பெறுவதற்கென்றே தேர்வுகள் எழுதினதாகச் சொல்லுகிறார்.

தஞ்சாவூர் புனித பீட்டர் பள்ளியில் ஓராண்டு பணியாற்றிய இவர் (1945-46) 1946 முதல் 1951 ஆண்டு

வரை திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றினார். பின்னர் 1951 முதல் 1965 வரை திருக்காட்டுப்பள்ளி சிவசுவாமி ஐயர் பள்ளியிலும் 1965 முதல் 1980 வரை திருவையாறு அரசர் கல்லூரியிலும் தமிழ்த் தொண்டாற்றினார். 1980 லிருந்து புதுவை பிரஞ்சுக் கழகத்தில் பணிபுரிந்து வருகிறார்.

தமிழிலக்கியத்தைக் 'கரைத்துக்' குடித்த இவர் இலக்கணங்களையும் விட்டு வைக்கவில்லை. நச்சினார்க் கினியர் போன்ற உரையாசிரியர்களைத் தலைமேற் கொள்வர். இலக்கண விளக்கம், இலக்கணக் கொத்து, பிரயோக விவேகம் போன்ற நூல்களுக்கு விளக்கவுரைகள் எழுதியிருக்கிறார். இலக்கணப் பெரும் புலவர் பலரும் மறைந்து வரும் நாளில் பழைய இலக்கண நூல்களுக்குத் திரு. கோபாலய்யர் போன்றாரை விட்டால் தமிழிலக்கண நுட்பங்களை எடுத்துச் சொல்ல நாதி இல்லை. இவர் விளக்கம் எழுதியிருக்கிற வீரசோழியம், மாறனகப் பொருள், மாறனலங்காரம் போன்ற நூல்கள் வெளிவரவிருக் கின்றன. இவர் தேவாரத்தைச் செம்பதிப்பாகப் பதிப்பித் திருக்கிறார்.

பிரஞ்சுக்காரர்கள் நம்மை விட்டுப் போன பிறகும் தமிழை விடாமல் பல அரிய தமிழ்ப் பணிகளைச் செய்து வருகின்றனர். பிரஞ்சுக் கழகத்தின் மூலம் இலக்கணச் செய்தி அகராதி திருமங்கை பாசுரங்களின் மணிப்பிரவாள நடையின் தமிழாக்கம் (பக் 3500) வைணவ உரைநடைத் தமிழுக்கு அகராதி (10000-சொற்கள் மேற்கோள்களுடன்) முதலியன கோபாலய்யர்தம் பெரு முயற்சியால் வெளி வருகின்றன. ஐயருடைய அயராத உழைப்பினால் இவை எழுதப்பட்டன.

கம்பன் கண்ட முனிவர், கம்பன் கண்ட தம்பியர் முதலிய நூல்களும் இவரால் எழுதப்பட்டுள்ளன. தருமை

ஆதீனம் வெளியிட்டுள்ள பன்னிரு திருமுறைகள் பதினேழு தொகுதிகளில் சிலவற்றிற்கு இவர் உரை எழுதியிருக் கிறார் டாக்டர் உ. வே. சாமிநாதய்யருக்குப் பின் தமிழைப் பேணிப் பல ஆயிரம் பக்கங்களில் உரையும் விளக்கமும் எழுதிய பெரும்புலவர் வே. கோபாலய்யர் ஆவர்.

பெரியபுராணம், சீவக சிந்தாமணி போன்ற நூல்களைப் பற்றிய தொடர் சொற்பொழிவுகள் செய்திருக்கும் கோபாலய்யர் இந்த முதிர்ந்த வயதிலும் புதுவைச் சன்மார்க்கச் சங்கத்தில் பல சொற்பொழிவுகள் இயற்றி வருகிறார். நூற்கடலாகத் திகழும் இவர், நூற்றுக்கணக் கான கட்டுரைகள், விளக்க உரைகள், சிறு சிறு நூல்கள் எழுதியிருந்தும் அமைதியாகத் தமிழ்த் தொண்டு செய்து வருகிறார். சட்டை அணியாத திருமேனியராகிய இவர் வாய் மெல்லடகு மென்று கொண்டிருக்கும். சங்கத் தமிழ் நடையில் பேசியும் எழுதியும் வரும் கோபாலய்யருக்கு நன்றி செலுத்தத் தமிழர் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

## சு. மன்னர் மன்னன்

பாவேந்தர் அவருக்கு எச்சமாக இரண்டு விட்டுச் சென்றார். ஒன்று அவரது இலக்கியப் படைப்புகள். மற்றொன்று அவரது மகன். கனக. சுப்புரத்தினம்-பழநி யம்மா ஆகியோருக்கு ஒரே மகன் கோபதி என்னும் மன்னர் மன்னன் ஆவர். பாவேந்தர் தம் படைப்புகளும் மகன் மன்னர் மன்னனும் ஒரே நிறை; ஒரே விலை. கரிக்குக்கன்று ஒன்று அமையாதோ?

புதுச்சேரியில் இருக்கும் பிரஞ்சுக் கல்லூரியில் இளங் கலை வகுப்பு வரை படித்தார். நாட்டு விடுதலைப் போராட்டத்தில் வெள்ளையருக்கு எதிரான நிகழ்ச்சிகளில்

பங்கு பெற்றார் என்ற காரணத்தால் அவர் கல்லூரி யினின்றும் நீக்கப்பட்டார். அது நிகழ்ந்தது 1947 ஆம் ஆண்டு கல்லூரியில் இருந்த காலத்தில் முரசு என்னும் கை யெழுத்திதழ் ஒன்று நடத்தினார். அரசுக்கு எதிரான செய்திகள் வெளியிடப் பட்டதால் இவர் மேல் அரசு வழக்கு தொடர்ந்து (1944) வயதில் சிறியவர் (பதினான்கு) என்பதால் விடுதலை செய்யப் பட்டார்.

கல்லூரியை விட்டு வெளியேறிய மன்னர் மன்னன் பாவேந்தரின் வெளியீடுகளையும் அச்சகத்தையும் பதிப்பக வேலைகளையும்க வனித்து வந்தார் சிறுவயதிலிருந்தே எழுதி வந்த மன்னர் மன்னன் சிறுகதைகள் எழுத ஆரம்பித்தார் இவரது 'விடிவெள்ளி' என்னும் சிறுகதை 'பொன்னி' இதழில் வெளிவந்தது. விதவைத் திருமணத்தைப் பற்றியது அச்சிறுகதை குயிலில் எழுத்துப் பணி செய்து கொண்டு இருந்த பாவேந்தர் மைந்தர் 'தமிழ் முரசு' 'வழிகாட்டி' என்னும் வார இதழ்களை வெளியிட்டார். 1960ல் 'வானம்பாடி' என்னும் குழந்தைகளுக்கான இதழொன்று நடத்தினார்.

பாரதிதாசன் இறப்பிற்குப்பின் 1966ல் 'குயில் பொறுப் பினை ஏற்றார். 1968 முதல் பத்தொன்பது ஆண்டுகள் வானொலியில் பணியாற்றினார். வானொலிப் பணி இவரது எண்ணத்திலும் செயலிலும் பெருத்த மாற்றங்களை உண்டாக்கியது; பரந்த மனப்பான்மை அணுகுமுறை எழுத்தை ஆளும் முறை ஆகியவற்றைக் கற்றுக் கொண்டார் என மன்னர் மன்னன் கூறுகிறார். தொலைக்காட்சி வானொலிக்குப் பகை என நினைப்பதை இவர் மறுக்கின்றார் தொலைக் காட்சி வானொலிக்கு என்றும் போட்டி யில்லை என்றும் பாவேந்தர் செல்வர் கூறுவது சிந்தனைக் குரியதாகும். தொலைக்காட்சி வந்ததால் மேனாடுகளில்

வானொலி செயலற்றுப் போகவில்லை. மேல் நாடுகளில் வானொலி சிறப்பாகவே இருக்கிறது.

பதினாறு நூல்களை வெளியிட்டியிருக்கின்ற மன்னர் மன்னன் பல பரிசுகளைப் பெற்றிருக்கிறார். இவரது படைப்புகளில் "கருப்புக் குயிலின் நெருப்புக் குரல்" "பாவேந்தர் வாழ்க்கைப் பாங்கு" "பாவேந்தர் இலக்கியப் பாங்கு" (புதுவை அரசின் ரூ 5000/ பரிசு பெற்றது) "பாவேந்தர் படைப்புப் பாங்கு" 'பாவேந்தர் உள்ளம்' என்பன குறிப்பிடத்தக்க சில நூல்களாம் இவரது "நெஞ்சக் கதவுகள்" என்னும் சிறுகதைத் தொகுதி தமிழக அரசின் பரிசினைப் பெற்றதாகும். இவரது வானொலிக் கவிதைகள் ஒளிப்பூக்கள் என்னும் தலைப்பில் வெளிவந்திருக்கின்றன. இவரது வானொலியில் இலக்கிய நாடகங்கள் நான்கு தொகுதிகளாக வெளியாகி யுள்ளன 'பிள்ளைகளே கேளுங்கள்' என்பது குழந்தைகளுக்கான ஒரு படைப்பாகும்.

பாவேந்தர் படைப்புகள் பல இன்னும் கையெழுத்துப் படிகளாகவே இருக்கின்றன. அவற்றைக் கவிதைகள், கட்டுரைகள், நாடகங்கள் என மூன்று பகுதிகளாக வெளியிட மன்னர் மன்னர் திட்டமிட்டிருக்கிறார். இதுவரை அச்சில் வந்த பாரதிதாசன் கவிதைகளுக்கு ஓர் ஆய்வுப் பதிப்பு வெளியிடவும் தொடங்கியிருக்கிறார். பாட பேதங்கள், சூழல்கள், பதிப்புச் சிக்கல்கள் இவற்றின் அடிப்படையில் அப்பதிப்பு நடைபெறும்.

காலிபோர்னியா பல்கலைக் கழகம் மன்னர் மன்னனுக்கு முனைவர் பட்டம் (D. Litt) வழங்கிச் சிறப்பித்துள்ளது. மேலும் பல விருதுகளும் கேடயங்களும் பெற்றுத் திகழும் இவர் எழுபது வயதிலும் இளைஞராகவே இருக்கிறார். அவர் இன்னும் எழுதிக் கொண்டிருக்கிறார். ஒரு படை

பாளனுக்கு வேண்டிய அனைத்துப் பண்புகளும் அவரிடம் உள்ளன.

பல பெருந்தமிழ்ப் பேராசிரியர்களுக்கு வாய்த்த பிள்ளைகள் தந்தையாருக்கு எந்த வகையாலும் பொருந்தாப் பிள்ளைகளாக வளர்ந்த சோக வரலாறு நமக்குத் தெரியும். ஆனால் பாரதிதாசனுடைய செல்வர் தந்தையார். என்னோற்றார் எனப் பலரும் கேட்குமாறு அமைந்து விளங்குகிறார் என்பது தமிழன்பர்களுக்கு மகிழ்ச்சியூட்டு வதாகும்,

மகன்றந்தைக் காற்றும் உதவி இவன்றந்தை
என்னோற்றான் கொல்லெனுஞ் சொல் (70)

## நீ. கந்தசாமிப் பிள்ளை

பள்ளியகரம் நீ. கந்தசாமிப் பிள்ளை அரும்பெரும் புலவர்களில் ஒருவர். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழாராய்ச்சித் துறையில் பணியாற்றியவர். கோ. சுப்பிரமணியப் பிள்ளை என்பவர் தமிழாராய்ச்சித் துறையில் தலைவராக இருந்தார். திருவாசகப் பதிப்பு அவரால் செய்யப்பட்டது. பெரு முயற்சியால் அப்பதிப்பு வெளியிடப்பட்டதாகச் சொல்லுவார். பொறுமையாக இதுவரை வெளிவந்த திருவாசகப் பதிப்புகளையும் ஓலைச் சுவடிகளையும் ஒப்புநோக்கி இப்பதிப்புச் செய்யப்பட்டது. பிறகு புதுச்சேரிப் பிரஞ்சுக் கழகத்தில் பலவாண்டுகள் பணியாற்றினார். சங்க நூல் இலக்கிய அடைவு என்னும் நூலினைப் பிரஞ்சுக் கழகத்தின் சார்பில் வெளியிட்டார். அது மூன்று தொகுதிகளைக் கொண்டது. தமிழாராய்ச்சி யாளருக்குப் பெரிதும் பயன் தருவது. தமிழோங்கி வளர் வதற்கு நீ. கந்தசாமிப் பிள்ளையின் தொண்டு பெருந் துணையாக அமையும் என்பதில் யாதொரு ஐயமும் இல்லை.

கி. ஆ. பெ. விசுவநாதம் அமைத்த புலவர் குழுவின் உறுப்பினராக நீ. கந்தசாமிப் பிள்ளை இருந்து பணியாற்றினார்.

## தெ. பொ. மீனாட்சி சுந்தரம்

'தெ. பொ. மீ' எனப் பலராலும் அறியப்படும் தெ. பொ. மீனாட்சி சுந்தரம் கற்றுத் துறை போகிய பேரறிஞர் ஆவர். தமிழும் ஆங்கிலமும் வல்ல பன்மொழிப் புலவர். இவரது ஆங்கிலக் கட்டுரைகள் பல இவர்தம் மணிவிழா மலராக - தொகுப்பாக வெளிவந்திருக்கின்றன. மொழி நூலில் அறிஞராகிய இவர் மொழி நூல். வரலாறு ஒன்று எழுதியிருக்கிறார்.

தமிழகத்திற்குப் 'பிள்ளையார்' வணக்கம் வந்த வரலாற்றைத் திறம்பட ஆராய்ந்து "பிறந்தது எப்படியோ" என்னும் நூல் யாத்திருக்கிறார். மீனாட்சி சுந்தரம்' அவர்கள் பலநூறு ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதி பல கருத்தரங்குகளில் படித்திருக்கிறார். பல கருத்தரங்கத் தலைவராகவும் இருந்திருக்கிறார். வடமொழி அறிவு பெற்றுத் திகழ்ந்த இவர் அவ்வறிவைத் தமிழ் வளர்ச்சிக்குப் பயன்படுத்தினார். தெ. பொ. மீ தமிழும் பிற பண்பாடும், கவிஞர் 'இரவீந்திரநாத தாகூர்' முதலான நூல்களும் எழுதியிருக்கிறார். 'தமிழ் மொழி வரலாறு' என்பது இவரது அரிய படைப்பாகும்.

மதுரைக் காமராஜர் பல்கலைக் கழகத்தின் முதல் துணைவேந்தராக இருந்து தொண்டாற்றினார்.

# மு. ராகவ அய்யங்கார்

ரா. ராகவ அய்யங்காருக்கு மிக நெருங்கிய உறவினர் மு. ராகவ அய்யங்கார். இவ்விருவரும் தமிழில் பெரும் புலமை பெற்றுத் திகழ்ந்தனர்.

மு. ராகவ அய்யங்கார் ஒரு சிறந்த ஆராய்ச்சியாளர். மதுரைத் தமிழ்ச் சங்கத்து "செந்தமிழ்" என்னும் திங்களிதழில் பல ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதினார். இவர் எழுதிய கட்டுரைகள் பலவும் தொகுக்கப்பட்டு ஒரு பெரும் நூலாக 'ஆராய்ச்சித் தொகுதி' என்னும் பெயரில் வெளிவந்துள்ளது. இத்தொகுதியினை ஊன்றிப் படித்தாலே தமிழில் பெரும் புலவராக வீற்றிருக்கும் வாய்ப்புப் பெறலாம். 'நல்லிசைப் புலவர் மெல்லியலார்' என்பதும் இவர் எழுதிய மற்றொரு நூலாகும். இவர் கம்பராமாயணத்தின் சில பகுதிகளுக்கு உரை எழுதிய தாகச் சொல்வர்.

மு. இராகவய்யங்கார் சேதுபதி சமஸ்தானத்தோடு தொடர்பு கொண்டவர். இவரது அத்தானாகிய ரா. ராகவய்யங்கார் அப்பொழுது சேதுபதி சமஸ்தான வித்துவானாக இருந்தார். மு. ராகவய்யங்கார் செந்தமிழ் வளர்த்த தேவர்கள் என்றொரு நூலும் எழுதியிருக்கிறார்.

தமிழ் வளர்ச்சிக்காக வாழ்ந்த இப்புலவர்களை நாம் நினைவு கூர்தல் பொருத்தமுடைத்து.

## அ. அருணகிரி

புதுச்சேரி மாநிலத்தில் அரசியல் செல்வாக்குடைய ஒரு குடும்பத்தில் பிறந்தவர் அ. அருணகிரி ஆவர். அவர் தந்தையார் வ. அண்ணாமலை நாயகர் புதுச்சேரி சட்ட சபையின் சபாநாயகராக இருந்து புகழெய்தியவர்.

தமிழாசிரியராகப் பல்வேறு அரசு பள்ளிகளில் பணியாற்றிய இவர் காரைக்குடிக் கம்பன் அப்டிபொடி சா. கணேசனிடம் பற்றும்பாசமும் கொண்டார். அதனால் இவர் கம்பன் கவிதை இன்பத்தில் திளைக்கும் வாய்ப்புப் பெற்றார். ஆண்டு தோறும் காரைக்குடிக் கம்பன் விழாவிற்குச் சென்று வந்த இவர் அவ்விழா மேடைகளில் பங்கும் பெற்றார். முதன் முதல் அவர் கும்பகர்ணனைப் பற்றி 1967–ல் காரைக்குடி விழாவில் சொற்பொழி வாற்றினார். கம்பன் சுவைஞர் பலர் இவருக்கு நண்பராயினர்.

புதுவையில் கம்பர் விழாவினை ஆண்டுதோறும் கொண்டாடக் கம்பன் கழகம் கண்ட அருணகிரி சாகும் வரை அக்கழகத்தினைக் கட்டிக் காத்தார். எறும்பு போல் சுறுசுறுப்பாக இயங்கிக் கம்பன் கழகத்திற்கு, மூன்று லட்சம் வரை வைப்பு நிதி ஏற்படுத்தினார். 1966–ஆம் ஆண்டு தொடங்கப்பட்ட அக்கழகம் கடந்த முப்பத்திரண்டு ஆண்டுகளாகக் கம்பர் விழாவினை நடத்திப் புதுவையில் கம்பனைப் பற்றிய சிந்தனையை ஏற்படுத்துகிறது. அருணகிரி இருபத்தேழு ஆண்டுகள் கழக விழாவினை நடத்தினார்.

அ. அருணகிரி கம்பராமாயணம் என்னும் பெருங்கடலில் மூழ்கிக் குளித்துத் தாம் கண்டடுத்த கம்பனின் முத்துப் பாக்களைச் சுவைத்துப் பல நூல்கள் எழுதினார் கம்பன்

காட்டும் தீராக் காதலன், தாயர் வளம், கம்பன் காட்டும் கும்பகர்ணன், கம்பக் கதம்பம், வானொலி விருந்து இந்திய விடுதலைப் போரில் தமிழிலக்கியத்தின் பங்கு முதலிய பல நூல்களை எழுதினார். கம்பன் கழக வெள்ளிவிழா மலரொன்றும் வெளியிட்டார்.

புதுவை நகர சபையின் கலையரங்கிற்குக் ‘‘கம்பன் கலையரங்கு’’ என்னும் பெயர் சூட்ட அருணகிரி முயன்று வெற்றியும் பெற்றார். கம்பனால் அருணகிரியா அருணகிரி யால் கம்பனா என்ற அளவுக்கு அவர் கம்பனின் பாசமுள்ள தோழராக விளங்கினார். கம்பர் விழாக்களில் பேச்சாளர் கள் பேச்சினை மேடை விரிப்பின் மேலமர்ந்து ஆர்வமுடன் கேட்டுச் சுவைத்துக் கொண்டிருப்பார். இலக்கிய விழாவுக்குப் பல்லாயிர மக்கள் திரண்டு வந்து கேட்டு இன்புற்றது புதுவைக் கம்பன் விழா ஒன்றிலேதான் இந்தப் புதுமைக்குக் கம்பவாணர் அருணகிரி ஒரு முக்கிய காரணர் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி. நீதிபதி மகாராஜனோடு இலக்கிய விவாதங்களில் கலந்து கொள்வது அருணகிரியின் வழக்கமாக இருந்தது. இந்த நூலாசிரியர் அவரை ‘‘அருள் நிதி தரவரும் ஆனந்த மலை’’ என அழைப்பதுண்டு. அவர் குண்டாகப் பருத்து இருந்ததே அதற்குக் காரணம்.

உலக மகாக் கவிஞனாகிய கம்பனைப் புகழ்வதும் அவனுடைய காப்பியத்தைச் சுவைக்கும் படியாகச் செய்வதும் தமிழுக்குச் செய்யப்படுகின்ற பெரிய தொண்டு ஆகும். இப்படிக் கம்பன் புகழ் பாடிய அ. அருணகிரியைக் கம்பவாணர்’ என்னும் பட்டமளித்துப் போற்றியது பொருத்த முடையதே ஆகும்.

# சி. இராஜகோபாலாச்சாரியார்

இருபதாம் நூற்றாண்டில் தமிழ் வளர்த்த பெரியோர்களில் சி. இராஜகோபாலாச்சாரியார் என்னும் ராஜாஜிக்கு ஒரு குறிப்பிடத் தகுந்த இடம் உண்டு. இந்திய தேசியப் போராட்டத்தின் தலைவர்களில் ஒருவராகிய ராஜாஜி ஒரு சிறந்த இலக்கிய வாதியாகவும் ஆற்றல் மிக்க எழுத்து வேந்தராகவும் திகழ்ந்தார். தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகிய மொழிகளில் பெரும் புலமை பெற்றுத் திகழ்ந்தார். இந்திய அரசியலில் சாணக்கியராகக் கருதப்பட்ட அவர் அரசியல் பதவிகள் பலவற்றை அலங்கரித்தார். வங்காளத்தின் ஆளுநராகவும், இந்தியாவின் கடைசி கவர்னர் ஜெனரலாகவும் சென்னை ராஜதாணியின் முதலமைச்சராகவும் அவர் பதவி வகித்தார்.

1937-ஆம் ஆண்டு சென்னையின் முதலமைச்சராக இருந்த அவர் தமிழைப் பயிற்சி மொழியாக உயர்நிலைப் பள்ளிகளில் புகுத்தினார். அறிவியல் பாடங்களைத் தமிழில் சொல்லித் தருவது கடினமானது என எதிர்ப்பு வந்த போது திண்ணை ரசாயணம் என்னும் நூல் எழுதி எதிர்ப்பாளர் வாயை அடக்கினார். ராஜாஜி சிறுகதைகள் பல எழுதினார். சுதந்திரப் போராட்டத்தில் சிறைப்பட்ட போது சிறையில் இருந்தவாறே ''சிறையில் தவம்'' என்னும் நூல் எழுதி சிறை வாழ்வை விளக்கினார். ஆழ்வார் பாசுரங்களில் மனதைப் பறிகொடுத்த சக்கிரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் அப்பாசுரங்கள் பலவற்றை விளக்கி நூல் எழுதினார். 'பக்தி நெறி' என்பது திருவாய் மொழியை விளக்கும் ஒரு நூலாகும்.! எல்லாவற்றிற்கும் மேலாக வான்மீகியை அடியொற்றி இராம காதையைச் ''சக்கரவர்த்தித் திருமகன்'' எனத் தமிழில் சொன்னார். வியாசர் பாரதத்தை ''வியாசர்விருந்து எனத் தமிழில்

படைத்தார். இவ்விரு நூல்களும் நெஞ்சை அள்ளும் திவ்விய மொழியில் எழுதப்பட்டன. எளிமையும் இனிமையும் வாய்ந்தன. இதைவிட வேறு வகையாக எழுத முடியாது என்று கூறுமளவுக்கு எழுதப்பட்டன. இவை மலிவுப் பதிப்புகளாக வெளிவந்து இலட்சக்கணக்கில் விற்பனை ஆயின. நூலின் முன்னுரையில்'' கங்கையும், யமுனையும் உள்ளவரை ராமாயணம், பாரதமும் இந்த மண்ணில் நிலைத்திருக்கும் என்னும் கருத்தினை வெளியிட்டிருக்கிறார். அவர் எழுதிய ''சக்கரவர்த்தித் திருமகன்'' ''வியாசர் விருந்து'' ஆகிய வசன நூல்களும் நிலைபேறுடையவாக இவ்வுலகில் நின்று நிலவும் என்பதில் ஐயமில்லை.

ஒரு முறை தமிழ்த் தாத்தா உ.வே. சாமிநாதையருக்குத் 'தமிழ் வியாசர்' என்னும் பட்டத்தைச் சூட்டினார் ராஜாஜி. இந்த நிகழ்ச்சி வியாசரிடத்தில் ராஜாஜிக்கு எத்தனை பற்று இருந்தது என்பதைக் காட்டவல்லது.

'முதல் மூவர்' என்பது முதலாழ்வார் மூவரைப் பற்றிய நூல். சோமு என்பாருடன் இணைந்து எழுதியது. பஜகோவிந்தம், நிரந்தரச் செல்வம், வேதாந்த தீபம், கண்ணன் காட்டிய வழி, மெய்ப்பொருள் முதலிய பல நூல்களை எழுதி ராஜாஜி தமிழுக்குத் தொண்டு செய்தார்.

## வை. மு. கோபாலகிருஷ்ணமாச் சாரியார்

வை. மு. கோபாலகிருஷ்ணமாச் சாரியார் என்பது தான் வை மு.கோ. எனச் சுருக்கப்பட்டது. வடமொழியும் தென் பொதியத் தமிழ் மொழியும் கற்றுத்துறை போகியவர் இந்த வை.மு.கோ. ஆவர். இவர் தமிழ் அகராதி (exicon) பதிப்புக் குழுவில் தொண்டாற்றினார். அப்பதிப்பின் தலைவராக வையாபுரிப் பிள்ளை இருந்தார். வடமொழிப் புலமையோடு வேதங்களிலும் புலவராக இருந்தவர் இப் பெரும் புலவர். இவர் கம்பராமாயணம் முழுமைக்கும் அரியதொரு உரை எழுதியிருக்கிறார். மிக அரியதாக அமைந்த இந்த உரையைப் பலரும் பாராட்டியுள்ளனர். பீஸ்ரீ என்னும் தமிழறிஞர் இவரை ''உரையாசிரியர் சக்கரவர்த்தி'' எனப் புகழ்ந்து கூறுவர்.

இவர் வில்லி பாரதம், பத்துப்பாட்டு, நாலடியார் நன்னூல், சடகோபர் அந்தாதி, திருப்பாவை, திருவேங்கடக் கலம்பகம், மதுரைக் கலம்பகம், முதுமொழிக் காஞ்சி, அஷ்டப் பிரபந்தம் நாலாயிரத்திவ்யப் பிரபந்தம் ஆகிய வற்றிற்கு அழகிய உரை எழுதியிருக்கிறார். இவரது உரை மிக விளக்கமாகவும் நீண்டும் இருக்கின்றது. இவர் உரையில் வடசொற்கள் மிகுதி இருபதாம் நூற்றாண்டு உரை யாசிரியர்களில் இவர் மிகுதியான நூல்களுக்கு உரை எழுதி யிருக்கின்றார். எனவே இவரை 'உரையாசிர்யர் சக்கரவர்த்தி' எனக் கூறுவது மிகப்பொருத்தமே.

## திராவிடமணி

வெள்ளகால் ப. சுப்பிரமணிய முதலியார் ஒரு தமிழ்ப் பேரறிஞர். எண்பது வயதுக்கு மேல் வாழ்ந்து தமிழுக்குத் தொண்டாற்றியவர். கம்பனிடத்தில் தீராக் காதல் கொண்டவர். பத்மாவதி சரித்திரம் என்னும் நூலை எழுதிய அ. மாதவைய்யா ஒரு பத்திரிக்கை நடத்தினார். 'பஞ்சாமிர்தம்' என்பது அவ்விதழின் பெயர். இப் பத்திரிக்கையில் சுப்பிரமணிய முதலியார் கம்பராமாயண இன்கவித் திரட்டு என்னும் தலைப்பில் கம்பர் பாடல்களைச் சுவைத்து விளக்கந் தந்து தொடர்ந்து எழுதி வந்தார். கவிமணி முதலானோர் இவர் தொண்டினைப் பாராட்டி யிருக்கிறார்கள்.

இவர் தமிழுக்கு ஒப்பரிய ஒரு பெருந்தொண்டு செய்தார். மில்டனைத் தமிழுக்கு அறிமுகப்படுத்தினார். அவர் அவ்வாங்கிலக் கவிஞரை 'மில்டனார்' என்றுதான் கூறுவாராம். இவர் "இராமாயண உள்ளுறைப்பொருளும் தென்னிந்திய சாதி வரலாறும்" என்னும் நூல் எழுதினார். நெல்லைச் சிலேடை வெண்பா, அகலிகை வெண்பா, கோம்பி விருத்தம், ஜான் மில்டனார் சரிதம் போன்ற பல நூல்கள் இவரால் எழுதப்பட்டன. இவர் அவ்வப்போது பல தனிப்பாடல்கள் பாடியுள்ளார். இவர் மனோன் மணீயம் ஆசிரியர் சுந்தரம் பிள்ளையின் திராவிட இனக் கொள்கையை ஏற்றுக் கொண்டார். அது பற்றிப் பேசியும் எழுதியும் நண்பர்களோடு உரையாடியும் வந்தார். அதனால் இவரை திராவிடமணி என அழைத்தனர். சுவை யுள்ள பாடல்களைக் கேட்டபொழுது துள்ளிக்குதித்துச் சுவைத்து மகிழ்வார் எனப் பீஸ்ரீ கூறுகின்றார். தமிழ் என்றால் தோள்தட்டி ஆடு என்றார் பாவேந்தர் பாரதிதாசனும். தமிழ் வெல்க வெல்க என நாமும் பாடுவோம்.

## கி. இராமலிங்கனார்

தமிழ்த் தொண்டு செய்து நீண்ட புகழ் நட்டவர் கி. இராமலிங்கனார் ஆவர். புரோகிதத் திருமணங்களுக்குத் தமிழர் வாழ்வில் இடமில்லை என்றும் தமிழ்த் திருமணங்களையே தமிழர் செய்தல் வேண்டுமென்றும் கூறியும் எழுதியும் வந்தவர். அவர் தமது வரலாற்றினை 'என் வரலாறு' என்னுந் தலைப்பில் எழுதியிருக்கின்றார். அந்த வரலாற்று நூலில் தமிழிற் சடங்குகள் என்னும் தலைப்பில் புரோகிதச் சடங்கு முறையைச் சாடி இருக்கின்றார். தமிழர் முன்னேற்றத்திற்குப் பாடுபட்ட இவர் தமிழ் மொழி வளர்ச்சிக்கும் தொண்டாற்றியுள்ளார். தமிழில் ஆட்சி மொழிச் சொற்களைத் தொகுத்து வெளியிட்டார். இக்கலைச் சொற்கள் தமிழக அரசின் அலுவலகங்களில் பலராலும் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. தமிழில்* ஆட்சி மொழிச் சொற்களைத் தொகுத்த காரணத்தால் தமிழ் ஆட்சி மொழிக் காவலர் என இவர் அழைக்கப் பட்டார்.

''தீக்குறளைச் சென்றோதோம்'' என்னும் திருப்பாவைத் தொடருக்குக் காஞ்சி அடிகளார் ''தீக்குறளை'' என்பதை ''திருக்குறளை'' எனப் பொருளுரைத்தது பொருந்தாக் கூற்று என ஆட்சி மொழிக் காவலர் காஞ்சி மாமுனிவரிடம் நேரிற் சென்று போராடிய செய்தி நாம் அறிந்த வொன்றே ஆகும்.

---

* ஆட்சிச் சொல் அகர வரிசை, ஆட்சித் துறைத் தமிழ்.

## ௯. வெள்ளை வாரணம் பிள்ளை

கட்டையான உருவம். நெற்றியில் திருநீறு. முழுக் கைச் சட்டை. கீழே வெள்ளை வேட்டி. மேட்டிலிருந்து கீழ் நோக்கி வரும் நடை. சாந்தம் தவழும் மொழி. பணிவும் பண்பும் தரும் தோற்றம் – இவையே க. வெள்ளை வாரணம் பிள்ளை.

ஆழ்ந்த கல்வி, சைவ சமய இலக்கியத்தில் ஆழ்ந்த புலமை. எதையும் பயபக்தியோடு சொல்லும் பாங்கு, இசை புலமை ஆகியன வெள்ளை வாரணம் பிள்ளையிடம் கண்ட பண்புகளாம்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழாராய்ச்சித் துறையில் இருந்து அருந்தமிழ்த் தொண்டு இயற்றினார். பேச்சிலும் எழுத்திலும் தெளிவும் திருத்தமும் உடையவர் சைவத் திருமுறைகளின் வரலாற்றை அழகிய முறையில் எழுதிய வித்தகர். ஆராய்ச்சிப் புலமை வாய்ந்த வெள்ளை வாரணம் பிள்ளை திருமுறைகளின் வரலாற்றை மிகச் சிறப்பாக எழுதியுள்ளார்.

# அ. ச. ஞானசம்பந்தம்

சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக இருந்து தமிழ்த் தொண்டு செய்தவர். இனிய பேச்சாளர். பட்டி மன்றங்களில் தம்மதம் நிறுவுவதில் வல்லவர். பல நூல்களை எழுதிப் புகழ் படைத்தவர்.

கம்பராமாயணத்தில் பெரும் புலமை வாய்ந்தவர். கம்ப சூத்திரங்களை அவிழ்த்து சித்து விளையாட்டுகளைச் செய்வதில் வல்லவர். "இராவணன் மாட்சியும் வீழ்ச்சியும்" என்னும் அரிய நூலைப் படைத்து அளித்தவர். ஞான சம்பந்தம் சிறந்த திறனாய்வாளர். திறனாய்வு பற்றிப் பல நூல்கள் எழுதியுள்ளார். மேல் நாட்டுத் திறனாய்வுக் கலையைத் தமிழுக்குச் சிறந்த முறையில் அறிமுகப் படுத்தினார். "இலக்கியக் கலை" என்னும் நூலின் வாயிலாகத் திறனாய்வு. கலையை வளர்த்தார். 'கம்பன் கலை' என்பது அத்துறையில் மற்றொரு நூலாகும்.

அ. ச. ஞானசம்பந்தம் தேசிய நோக்குடையவர். 'தேசிய இலக்கியம்' என ஒரு நூலும் வெளியிட்டுள்ளார். பழமையில் கால் ஊன்றி நிற்பவர். புதுமையைப் போற்றி வரவேற்கும் இயல்பினர். நாவன்மையால் கேட்போரை ஈர்க்கும் ஆற்றல் பெற்றவர்.

இவருடைய பல கட்டுரைகளின் தொகுப்பு கம்பன் "கலை" என்னும் பெயரில் வெளியாகியுள்ளது. முன்னர் காட்டிய இவரது "தேசிய இலக்கியம்" பெரிய புராணத்தைத் தேசிய இலக்கியமாகக் காட்டுகிறது. 'அகமும் புறமும்' என்பது இவரெழுதிய ஓர் இனிய நூலாகும்.

## மயிலை. சீனி வேங்கடசாமி

கற்றுத் துறைபோகிய வித்தகர். சிறந்த சிந்தனையாளர் ஆராய்ச்சியாளர். சமரச சன்மார்க்கச்சீலர். தமிழ் மூதறிஞர். மயிலை சீனி வேங்கடசாமி அவர்கள் பல ஆய்வு நூல் களின் ஆசிரியர்.

ஒரு காலத்தில் சைவர்கள் பிற சமய இலக்கியங்களைத் தொடுவதே இல்லை. அவ்வாறே வைணவர்களும். அதனால் சமணர், பௌத்தர் தமிழுக்குச் செய்த தொண்டு போற்றப் படாமல் இருந்தது. ஆராய்ந்து பார்த்தால் சமணர்கள் தமிழுக்கு மாபெரும் இலக்கியங்களைச் செய்தளித்து உள்ளனர். பல இலக்கணங்களும் காப்பியங்களும் நீதி நூல்களும் சமணரால் செய்யப்பட்டுள்ளன. இவ்வாறு சமணர்கள், பௌத்தர்கள் இசுலாமியர் இயற்றிய தமிழ்த் தொண்டுகளை மயிலை வேங்கடசாமி நூல்களின் வாயிலாக எடுத்துக் காட்டியுள்ளார்.

திரு. மயிலை சீனி வேங்கடசாமி "மறைந்து போன தமிழ் நூல்கள்" என்னும் நூலின் வாயிலாக நம்மக்கள் கவனக் குறைவால் நீருக்கும் நெருப்புக்கும் கறையானுக்கும் இரையாகிப் போன பல தமிழ் நூல்களின் பட்டியலை அரிதின் முயன்று தொகுத்துக் தந்துள்ளார். சிறந்த கல்வெட்டாராய்ச்சியாளராகிய வேங்கடசாமி பல வரலாறு நூல்களும் ஆக்கித் தந்துள்ளார். துளுவ நாட்டு வரலாறு, மூன்றாம் நந்திவர்மன், நரசிம்ம வர்மன் என்பன வரலாறு நூல்களாம். 'தமிழர் வளர்த்த அழகுக் கலைகள் என்பது ஓர் அரிய நூலாகும்.

சீனி வேங்கடசாமி ஒரு பகுத்தறிவு வாதிமதுரைப் பல்கலைக்கழகம் இவருக்குத் "தமிழ்ச் செம்மல்" என ஒரு விருது அளித்து (1979) சிறப்பித்தது. இவருக்கு 1961இல் மணிவிழா நடந்தது. அவ்விழாவில் இவருக்கு "ஆராய்ச்சி" அறிஞர் என்னும் பட்டம் வழங்கப்பட்டது.

# பேராசிரியர் க. அன்பழகன்

திராவிட இயக்கத்தில் தன்னை ஆரம்ப முதலே இணைத்துக் கொண்ட பேராசிரியர் க. அன்பழகன் அவர்கள் மயிலாடுதுறையைச் சேர்ந்தவர். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பயின்றவர். சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக இருந்தவர். தமிழ் மக்களால் பேராசிரியர் என அழைக்கப்பட்டு வருபவர். அழகுத் தமிழில் பேசும் ஆற்றல் பெற்றவர். தமிழ்நாடு அரசு திராவிட முன்னேற்றக் கழகத்தின் அரசாக இருந்த பொழுதெல்லாம் அமைச்சராகப் பொறுப்பு ஏற்றுத் தொண்டாற்றி வருபவர். அறிஞர் அண்ணா முதலமைச் சராக இருந்த பொழுதும் கலைஞர் கருணாநிதி முதலமைச் சராக இருந்த காலத்தும் - இப்பொழுது இருக்கின்ற காலத்தும் - கல்வி அமைச்சராக இருந்து செந்தமிழ்த் தொண்டு செய்து வருபவர். பெரியார் ஈ. வெ. ரா வின் தன்மானக் கொள்கையில் முற்றும் நம்பிக்கை உள்ளவர்.

க. அன்பழகன் தமிழில் பல நூல்கள் எழுதியுள்ளார். ''தமிழர் திருமணமும் இனமானமும்'' என்னும் நூல் தமிழர் திருமணங்களில் தமிழ் இருக்க வேண்டுமென வலியுறுத்துகிறது. புரோகிதத் திருமணம் இடையில் புகுத்தப்பட்டதென எடுத்தியம்புகிறது. தமிழர் தம் தன்மானம் புரோகிதச் சடங்குகளால் எவ்வாறெல்லாம் இழிவு படுத்தப்படுகிறது என்பதை எடுத்து விளக்குகிறது. நானூற்று எண்பதுக்கு மேலான பக்கங்களையுடைய இந்த நூல் தமிழர் ஒவ்வொருவரும் படித்தறிய வேண்டிய தொன்றாகும்.

# எம். அப்துல் வஹாப்

அலிகர் பல்கலைக் கழகத்தில் படித்த எம் அப்துல் வஹாப் தமிழ், ஆங்கிலம், அறபி ஆகிய மொழிகளில் பெரும் புலமை வாய்ந்தவர். சமயப் பேணுதல் உடைய இவர் ஆழ்ந்த சமயப் பற்றும் உள்ளவர்.

இவர் ஒரு சிறந்த எழுத்தாளர்; நாவன்மை படைத்தவர் 'பிறை' என்னும் திங்கள் இதழினை நடத்திப் புகழ்பெற்றவர் இவர் எழுதிய கட்டுரைகள் பல்வேறு இதழ்களில் வெளி வந்திருக்கின்றன.

இசுலாமியரும் பிற சமயத்தினரும் எளிதாகப் புரிந்து கொள்ளும் வகையில் திருக்குர் ஆன் தரும் செய்திகளைத் "தித்திக்கும் திருமுறை" என்னும் தலைப்பில் இனிக்க இனிக்க எடுத்துச் சொன்னவர் "நன்மணிகள் நால்வர்" "சுவர்க்கத்துக் கவிஞர்" "மாநபியின் மகளார்" முதலான நூல்களின் ஆசிரியர் அரபுநாடுகள் உள்பட பல வெளிநாடு களில் பயணம் செய்து சொற்பெருக்காற்றியவர் இந்நூலா ஆசிரியர் எழுதிய "நாயகத் தமிழ்" நூலின் கட்டுரைகள் பலவும் அப்துல் வஹாப் நடத்திய 'பிறை' இதழில் தொடர்ந்து வெளிவந்தன.

## ச. தண்டபாணி தேசிகர்

சைவத் திருமேனியராகத் தோற்றம் தருபவர் ச. தண்டபாணி தேசிகர் ஆவர். சைவமும் தமிழும் இவருக்கு இரு கண்கள் மென்சாயல் நல்லார் அமைதியான தோற்றம் படபடப்பு இல்லாத மெல்லிய குரலில் பேசும் இயல்பினர் இவர் தமிழுக்குச் செய்துள்ள தொண்டு மிகப் பெரியது.

'திருக்குறள் உரைவளம்' எனத்திருக்குறளுக்கு உள்ள பதின்மர் உரைகளையும் ஒன்றாகச் சேர்த்துப் பதிப்பித்து உள்ளார் சிறந்த ஆராய்ச்சிகள் இதில் இடம் பெற்றுள்ளன திருக்குறள் உரைகளை ஒப்பிட்டு அறிய இது ஓர் "எய்ப்பினில் வைப்பு" எனலாம். மேலும் நன்னூல் சிவஞான முனிவர் விருத்தியுரையைத் திருத்தமுறப்பதிப்பித்தார் நூலில்ஏற்பட்ட பிழைகளைச் சுட்டிக் காட்டியுள்ளார். விளக்கம் பெறாத பகுதிகளுக்கு அரிய விளக்கமும் எழுதினார் இவர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பணியாற்றிளார்.

தமிழ் மொழி வளர்ச்சிக்கு இத்தகு நல்லசிரியர் செய்த தொண்டினை மறத்தலு மாமோ?

# மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை

திருமால் திருநெறியினர் தமிழ் மேவியசாயலர் கண்கள் பூத்துப் போகும் வரை தமிழுக்கு உழைத்தவர் மகாவித்து வான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை என அழைக்கப் பட்டவர்.

"கசடதபற வல்லினம்
ஒஙு னநமன மெல்லினம்
யரளவழள இடையினம்
யாரும் இங்கே ஓரினம்"

எனக் குழந்தைகளுக்குப் பாட்டாக இலக்கணம் சொல்லிக் கொடுத்தவர் பல தமிழ்ப் பாட நூல்களைப் பதித்தவர் இலக்கணப் புலமையும் இலக்கியப் புலமையும் வாய்க்கப் பட்டவர் இவர் யாப்பருங்கல விருத்தியுரை யாப்பருங்கலக் காரிகையுரை இறையனார் அப்பொருள் உரை தொல் காப்பியம் சொல்லதிகாரம் நச்சினார்க்கினியர் உரை ஆகிய உரைகளைப் பதித்தவர்.

மெலிந்த உடல் தோற்றத்தவராகிய இவர் குரல் கணீரென ஒலிக்கும். பலர் எழுதிய நூல்களுக்கு இவர் அணிந்துரை நல்கியுள்ளார். புதுவைப் புலவர் இலக்கணச் செம்மல் குமாரசாமி செட்டியாருடைய இலக்கியப் பரிசு என்னும் நூலுக்கு மே.வீ. வேணுகோபாலப் பிள்ளை அழகிய முன்னுரை அளித்துள்ளமை குறிப்பிடத் தக்க தொன்றாம்.

குழந்தைகலுக்குப் பாடல்களும் இவர் பாடியருக்கிறார்.

"அம்மா இங்கே வா. வா.
ஆசை முத்தம் தா. தா." என வரும் பாடல் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை இயற்றியதே.

# எஸ். முஹம்மது ஹுஸைன் நயினார்

விந்தைக்குரிய அறபி, தித்தித்திடும் பார்சி, அழகுமொழி உருது, சிந்தைக்கினிய செந்தமிழ் ஆகிய மொழிகளில் புலமை கொண்ட பன்மொழிப் புலவர் எஸ் முகமது உசைன் நயினார் ஆவர். அறபி, பார்சி, உருது ஆகிய மொழிகளின் துறைத்தலைவராகச் சென்னைப் பல்கலைக்கழகத்தில் பணி புரிந்தவர். டாக்டர் என்னும் முனைவர் பட்டம் பெற்றவர். பெரும் புலவர்கள் மு. ராகவய்யங்கார் போன்றவர்களுடன் நெருங்கிய தொடர்புள்ளவர். மதுரைத் தமிழ்ச்சங்கப் பண்டிதரும் ஆராய்ச்சியாளருமான பி. ஆர். புருஷோத்தம நாயுடு உசைன் நயினாருக்குத் துணைநின்ற புலமைச் சான்றோர் ஆவர்.

இவர் செத்துங் கொடுத்த சீதக்காதி என்னும் செய்கு அப்துல் காதிர் வரலாற்றினை மிகத் திறம்பட எழுதியிருக்கிறார். 'சீதக்காதி வரலாறு' என்பது அந்நூலின் பெயர் சீதக்காதியைப் பாராட்டிப் புலவர்கள் பாடிய புகழ்ப் பாக்களை எல்லாம் ஒன்றாகத் தொகுத்து வெளியிட்டிருக்கிறார். படிக்காசுப்புலவர், நமச்சிவாயப் புலவர் ஆகிய புலவர் மணிகள் சீதக்காதியைப் பற்றிப் பாடிய பாடல்கள் அத்தொகுப்பில் இடம் பெற்றிருக்கின்றன.

காய்ந்து சிவந்தது சூரிய காந்தி; கலவியிலே
தோய்ந்து சிவந்தது மின்னார் நெடுங்கண் தொலைவில்
ஆய்ந்து சிவந்தது பாவாணர் நெஞ்சம் அனுதினமும்
ஈந்து சிவந்தது மால்சீதக் காதி யிருகரமே.

— படிக்காசுப் புலவர்.

முகமது உசைன் நயினார், எட்டையபுரம் உமறுகத்தாப் புலவர் பாடிய "செய்தக் காதிறு மரக்காயர் திருமண வாழ்த்து" என்னும் அரிய நூலை. முதன்முதல் 1953 ஆம்

ஆண்டு பதிப்பித்திருக்கிறார். இது சீதக்காதி மரக்காயர் காலத்து நிலவிய பல திருமணச் சடங்குகளையும் பழக்க வழக்கங்களையும் விவரிக்கிறது. இந்தத் திருமண வாழ்த்து அம்மானை வகையில் பாடப்பட்டுள்ளது. சீறாப்புராணம் பாடிய உமறு புலவரும் திருமண வாழ்த்துப் பாடிய உமறு காத்தாப் புலவரும் ஒருவரல்லர் என்பதே புலவர்தம் துணிபு ஆகும். முகமது உசைன் நயினார் சீதக்காதியைப் பற்றிய மற்றொரு அரிய நூலையும் அச்சிற் பதித்துள்ளார். "செய்தக்காதி நொண்டி நாடகம்" என்பது அந்நூலின் பெயர். இந்த நொண்டி நாடகத்தில் 1689-1697 ஆண்டுவரை எட்டாண்டுக் காலம் முகலாயர்களால் செஞ்சிக் கோட்டை முற்றுகை இடப்பட்ட செய்தி விவர மாகக் கூறப்பட்டுள்ளது.

நொண்டி நாடகம் பெரும்பாலும் கிராமப் புறங்களில் பெரிதும் பரவி இருப்பது. இது இனிய சந்தச்சுவை வாய்க்கப்பட்டது. எளிதில் புரியும் படியான சொற்களால் இயன்றது. பூபாளம், நாதநாமக் கிரியை, மோகனம் என்னும் ராகங்கள் இந்த நொண்டி நாடகத்தில் காணப்படு வதாகச் சொல்வர்.

"Arab Geogaphers' knowledge of Southern India" என்று ஆங்கிலத்திலும் முகமது உசைன் நயினார் ஒரு நூல் இயற்றியிருக்கிறார். சில மொழி பெயர்ப்புகளும் இவரால் செய்யப்பட்டுள்ளன.



# பு. அ. பெரியசாமிப் பிள்ளை

மகா வித்துவான் பு. அ. பெரியசாமிப் பிள்ளை என்னும் புலவர் கோமான் புதுச்சேரியில் தோன்றிய புகழ் மணிகள் பலருள் சிறப்புக்குரியவர் ஆவர். மரபுக் கவிதைகள் பல நூறு பாடிப் பனுவல்கள் செய்த பெருங்கவிஞராக அவர் வாழ்ந்தார். சுருட்டுத் தொழிலாளியாக இருந்தவர் யாவரும் சுவைத்துப் படிக்கும் பாமாலைகள் பாடினார். பல கவிஞர் களை உருவாக்கிய இம்மகாவித்துவானே பாவேந்தர் பாரதி தாசனாரின் ஆசிரியராகத் திகழ்ந்தவர்.

திருநீற்றுச் சைவராகத் திகழ்ந்த மகாவித்துவான் சமரச நோக்குடையவராகவும் இருந்தார். இவரது புதுவைக் கலம்பகம், புதுவை வெண்பா, ஸ்ரீமத் இராமாயண சங்கிரகம் ஆகிய நூல்கள் மூன்றும் திருமால் நன்னெறியைச் சார்ந்த நூல்கள் ஆகும்.

இலக்கண மரபு மீறாமலும் தமிழ் மணம் கமழவும் இவர் பல நூல்கள் இயற்றினார். ''மயிலாசல கீர்த்தனம்'' பக்திப் பாடல்களின் பெட்டகமாம். பெருவள்ளலாகத் திகழ்ந்த 'சபாபதி கிராமணி' என்பவர் மீது பல பாடல்கள் பாடினார். பெரியசாமிப் பிள்ளை அவர்கள் மயிலைச் சிலேடை வெண்பா, மயிலைக் கலம்பகம், மயிலத் தந்தாதி போன்ற சிற்றிலக்கியங்களும் பாடியிருக்கிறார். மயிலத் தந்தாதி என்னும் நூலுக்கு தாமே ஓர் உரையும் எழுதினார்.

நெடுங்கடல் உண்ட நீரினைப் பெய்து
நிலவரையினில் அழல்காலும்
கொடுங்கதிர்க் குடைந்த பயிரெலாம் வளர்க்கும்
குளிர்மிகும் கொண்டல்காள் கேண்மின்
கடுங்கலை மின்செய் புதுவைவாழ் வரதன்
காலணி அரங்க வேள் எனைச்செய்
நடுங்கலைத் தீர்ப்பாள் அலங்கலை வாங்கி
நல்குவீர் நான் பணிந்தேனே -

இவர் பாடிய புதுவைக் கலம்பகத்தில் ஒரு பாடல்.

# ஆ. கா. அ. அப்துஸ் ஸமது

பெரும் மார்க்க மேதையான அப்துல் ஹமீது பாகவியின் அருந்தவப் புதல்வர் அப்துஸ் ஸமது ஆவர். அறபி, தமிழ், ஆங்கிலம் ஆகிய மொழிகளில் பெரும்புலமை பெற்றவர் அப்துஸ் சமது. இசுலாமிய வரலாற்றினைக் கற்றுத் தேர்ந்தவர். தந்தையார் அப்துல் ஹமீது பாகவியுடன் உடன் இருந்து திருக்குர்ஆன் மொழிபெயர்ப்புப் பணிகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டவர் சிவந்த திருமேனியர், அழகிய தோற்றப் பொலிவு கொண்டவர். உலக நாடுகளைப் பன்முறை உலாவந்த சிறந்த பயணி இவர். தமிழ்நாட்டுச் சட்ட மன்றத்திலும் பாராளுமன்றத்திலும் உறுப்பினராக இருந்து சமுதாயப் பணி செய்தவர் இலட்சக்கணக்கான மக்களால் அன்போடும் பாசத்தோடும் நேசிக்கப் படுபவர். மக்களால் 'சிராஜுல் மில்லத்' சமுதாயத் தலைவர்' என அழைக்கப் படுபவர். நாவீறு கொண்ட நாவலர். நல்ல தமிழ் எழுத்தாளர். மணி விளக்கு, மணிச்சுடர் என்னும் இதழ்களின் ஆசிரியர். புதுவை மாநிலத்தில் காரைக்காலில் பிறந்தவர்.

இவர் எழுதிய எண்பதுக்கு மேற்பட்ட கட்டுரைகள் ஒரு பெரும் நூலாகத் தொகுக்கப் பட்டிருக்கின்றன தொகுத்தவர் மு. சாயபு மரைக்காயர் என்னும் சுறுசுறுப்புள்ள ஒரு கல்லூரிப் பேராசிரியர். இதில் பல்வேறு தலைப்புகளில் கட்டுரைகள் அமைந்திருக்கின்றன. "மாநிலத்தின் மணி விளக்கு" "நற்பணி ஆற்றிய நபிமணி" "புனித ஹஜ்ஜின் இனிய நினைவுகள்" என்பன அப்துஸ் ஸமது எழுதிய பிற நூல்களாகும்.

## வ. சுப்பையா பிள்ளை

தமிழில் வெளிவந்த நூல்களைக் காப்பதற்கென்றே பிறந்தவர். சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தைக் கண்டவர் கழகத்தின் சார்பில் இதுவரை ஆயிரத்திற்கு மேலான தமிழ் நூல்கள் வெளிவந்துள்ளன. மறைமலையடி களாரின் நூல்களை எல்லாம் தொகுத்து மறை அடிகளார் நூலகம் ஏற்படுத்தி நடத்தியவர். 'செந்தமிழ்ச் செல்வி' என்னும் திங்கள் இதழ் ஐம்பது ஆண்டுகளாக நடத்திப் புகழ் பெற்றவர். தமிழ் ஆட்சி மொழி, பயிற்சி மொழி ஆவதில் ஆர்வம் காட்டி உழைத்தவர்.

## இ. மு. சுப்பிரமணியப் பிள்ளை

தமிழுக்காக வாழ்ந்த பல பெரியோர்கள் தமிழ்மொழி வளர்ச்சிக்குப் பலவகையான தொண்டுகள் இயற்றியிருக் கிறார்கள் தனித்தமிழ் ஆர்வமும் தமிழ் ஓங்கி வளர வேண்டுமென்னும் பேரவாவும் கொண்டவர், இ. மு. சுப்பிர மணியப் பிள்ளை என்னும் தமிழன்பராவர். இவர் ஆட்சித் தமிழுக்குப் பல அழகிய சொற்களைத் தந்தவர் மேலும் 'ஆட்சிச் சொல் அகரவரிசை' என்று ஒரு நூலை வெளி யிட்டார். இத்தகு பெரியோர்களை நாம் போற்றுதல் வேண்டும்.

## நீலாம்பிகை அம்மையார்

தனித்தமிழ் இயக்கத்தைக் காலூன்றச் செய்த மறை மலை அடிகளாரின் திருமகளார் ஆவர் நீலாம்பிகை அம்மையார். இவர் தந்தையார் மறைமலை அடிகளாரிலும் தனித்தமிழ் ஆர்வம் கொண்டவர். தமது உறவின் முறையார்கள், பெயர்களைத் தமிழாக்கிய பெருமைக் குரியவர். இவர் "தனித் தமிழ்க் கட்டுரைகள்" என்னும் நூலை யாத்தவர். அதனால் தமிழ் மக்களிடை புகழுக் குரியவரானார். "வடசொல் – தமிழ் அகரவரிசை" என்னும் மற்றொரு நூலும் எழுதினார்.

## புலவர் குழந்தை

கம்பர் ஆரியர் கொள்கையினைத் தமிழில் புகுத்தி இராமாயணம் செய்தார் என்பது புலவர் குழந்தையின் கருத்து. இராவணன் தமிழரசன். தென்னவன் என்பதற்கு இராவணன் என நச்சினார்க்கினியர் பொருள் கூறுகிறார் என்பதும் அவர்கண்ட முடிபு. கம்பன்கூட இராவணன் புகழைப் போற்றிப் பாடுகிறார். பேராற்றல் உடைய பெரு மன்னன் அவன். எனவே இராவணனைப் புகழ்ந்தும் இராமனைப் பழித்தும் 'இராவண காவியம்' என்னும் காப்பியத்தைப் புலவர் குழந்தை படைத்தார். இந்த நூல் அக்காலத்தில் அரசினால் தடை செய்யப் பட்டிருந்தது. திராவிட இயக்கம் அரசோச்சும் காலம் வந்தபொழுது அத் தடை நீக்கப் பட்டது. காப்பிய மரபுகளைத் தழுவியே இராவண காவியம் இயற்றப்பட்டுள்ளது. தமிழுக்கு இக் காப்பியம் ஒரு நல்வரவாகும்.

புலவர் குழந்தை திருக்குறளுக்கும் ஓர் உரை எழுதி யுள்ளார். பரிமேலழகர் உரையிற் காணப்படும் கருத்துகள்

பலவும் ஆரிய மதம் பற்றியன என எடுத்துக்காட்டும் இவரது உரை. மூலநூல் ஆசிரியர் பலரும் தவறு செய்யாதவர் என்பது உரையாசிரியர் பலரின் கருத்தாகும். உரையாசிரியரே மூல நூலாசிரியர் கருத்துக்குப் புறம்பான செய்திகளைச் சொன்னார்கள் என்னும்கருத்தும் நிலவுகிறது. தொட்டனைத்தூறும் மணற்கேணி போலத் திருக்குறளைக் கற்க கற்க அறிவு ஊறும் என்பது என்னவோ உண்மை.

## ச. து. சுப்பிரமணிய யோகியார்

இந்த நூற்றாண்டின் பெருங்கவிஞர்களில் ச. து. சுப்பிரமணிய யோகியாரும் ஒருவர். ஆனால் பெரும்பாலோரால் அறியப்படாதவராகவே வாழ்ந்து மறைந்தார். கவிஞருள் ஒரு யோகியாக வாழ்ந்தவர். பன்மொழிப் புலமை வாய்க்கப்பட்டவர். தமிழ், ஆங்கிலம், ஹிந்தி, உருது, அறபு, பார்சி ஆகிய மொழிகளில் புலமை வாய்ந்திருந்தார். இவர் ஓர் அருங்கலை வினோதர்; பல்கலைச் செல்வர்.

யோகியாருக்குப் பால பாரதி என்னும் பட்டம் உண்டு. தேசியப் போராட்டத்தில் ஈடுபட்டார். பாரதி போல் தேச பக்த கவிஞராக வாழ்ந்தவர். "தேசபக்த கீதம்" என்னும் நூல் இவரால் எழுதப்பட்டது.

ச. து. சு. யோகியார் சிறைக்குச் சென்ற ஒரு தியாகி. சமரச நெறியினர். தீண்டாமை ஒழியப் பாடுபட்டவர். பெரியாரின் இயக்கத்தை ஆதரித்தவர். திரையுலகில் தேர்ந்தவர் கவியோகி நாடகத் துறையிலும் ஆர்வம் கொண்டவர். கம்பனும் தமிழும் இவருடைய இரு காதலிகள். சமயப்பற்று மிக்கவர்.

கம்பராமாயணத்தில் சில பாடல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். கம்பன் கழக வெளியீடாக இது வெளி

வந்தது. இவர் பாடல்கள் நெஞ்சைத் தொடும் சக்தி வாய்ந்தவை. தமது மகளொருத்தி சிறுமியாகவே இறந்து போனபோது இவர் ஒரு கையறுநிலை பாடினார் அதில்,

பட்டிட்டுப் பொட்டிட்டுப் பள்ளிக்கு (உ)னையனுப்பத்
திட்டமிட்ட தெல்லாம் திசைமாறிப் போச்சுதடி!

என்பது ஒரு பாடல்.

## அ. மாதவையா

தமிழ் மறுமலர்ச்சிக் காலத்து 'அருணோதயம்' அ. மாதவையா என்று பிஸ்ரீ குறிப்பிடுகின்றார். தமிழிலும் ஆங்கிலத்திலும் வல்லவராகிய மாதவையா தமிழில் நாவல் வளர்ச்சிக்கு முன்னோடியாக இருந்தார். இவர் சிறந்த கதாசிரியர்.

தேசபக்திப் பாடல் போட்டியொன்றில் இவரது பாடல் பரிசு பெற்றது. பாரதி இப்போட்டியில் தோற்றுப் போனார் ''பொது தர்ம சங்கீத மஞ்சரி'' என்பது இவர் எழுதிய தேசபக்திப் பாடலின் தலைப்பாகும். இவர் ''பஞ்சாமிர்தம்'' என்னும் பத்திரிக்கை நடத்தினார். இவரது எழுத்துகள் தமிழர் நேசன் என்னும் இதழில் தொடர்ந்து வெளிவந்தன. இவர் ''தில்லைக் கோவிந்தன்'' என்னுமொரு ஆங்கில நூல் எழுதினார். இவர் ''பத்மாவதி'' விஜய மார்த்தாண்டம்'' என்னும் புதினங்களை எழுதினார். இவர் வேறு சில தமிழ் நூல்களும் எழுதினார் ''முத்து மீனாட்சி'' ''திருமலை சேதுபதி'' என்பன அவை.

மாதவையா சமுதாயச் சீர்திருத்தக்காரராகவும் இருந்தார். இவர் தமிழ் மொழியின் எழுத்துத்துறையிலும் சில திருத்தங்கள் செய்ய முயன்றார்.

# பெரியார் ஈ. வெ. ரா.

தமிழ் மொழிப்புலமை பெரியாருக்கு இல்லை. அவர் ஓர் இலக்கிய இலக்கண மேதையும் இல்லை. தமிழர்கள் ஒரு பத்தாண்டுக் காலத்திற்குத் தமிழே படிக்கக் கூடாது என்று கூட ஒரு சமயம் சொன்னார் காரணம் தமிழ் படித்தோர் பலர் மொழி முன்னேற்றத்திற்கு முட்டுக் கட்டையாக இருந்ததே ஆகும். இவர்கள் பழம் பெருமை களையே பேசிக்கொண்டு காலங் கழித்தார்கள். தமிழில் ''எல்லாம் உண்டு'' எல்லாம் உண்டு' என்று சொல்லிக் கொண்டு திரிந்தார்கள் அதனால் புத்துலகக் கலைகள் பிற மொழிகளில் தோன்றி வளரும் போது தமிழ் ஏமாற்றத் தோடு நின்றது. அறிவியல் போன்ற கூர்மையான கலைகள் தமிழில் தோன்றவில்லை. எனவே தான் பெரியார் தமிழர் தம் உச்சியைப் பிடித்துக் குலுக்குவது போன்று தமிழர்கள் ஆர்ப்பரித்து எழுமாறு ''தமிழ் ஒரு 'காட்டுமிராண்டி' பாஷை'' என்றும் கூறினார். பெரியார் தாமே துணிந்து தமிழ் எழுத்துகளில் சில திருத்தங்கள் செய்தார். தமது ''விடுதலை'' என்னும் பத்திரிக்கையில் அச்சீர்திருத்தங் களைப் புகுத்தினார். இன்று அச்சீர்த்திருத்தம் அச்சுக்கலை யில் பெரும் மாற்றத்தைச் செய்து விட்டது. ''பெரியார் எழுத்து'' என்றே நாம் பேசுகிறோம். அரசின் ஆணையும் எழுந்தது. பள்ளிப் பாட புத்தகங்களிலும் பிற நூல்களிலும் பெரியார் எழுத்து முறையே பின்பற்றப்பட்டு வருகிறது. எனவே பெரியாரும் தமிழ் வளர்த்த பெரியோர் வரிசையில் ஒருவர் எனச் சொல்லத் துணிந்தேன்.

# அண்ணாமலை அரசர்

செட்டி நாட்டரசர் அண்ணாமலைச் செட்டியார் இந்த நூற்றாண்டில் தமிழ் வளர்ச்சிக்குப் பெருங்காரணமாக இருந்தவர். தில்லையின் எல்லையில் ''மீனாட்சி கல்லூரி'' எனவொரு தமிழ்க் கல்லூரியைத் தோற்றுவித்து அதன் மூலம் தமிழ் வளர்ச்சிக்குக் காலூன்றினார். அந்தக் கல்லூரியே பின்னர் அண்ணாமலைப் பல்கலைக் கழகமாக 1929-இல் பரிணமித்தது. தமிழில் பட்டப்படிப்பும், தமிழாராய்ச்சித் துறையும் இங்கே ஏற்படுத்தப்பட்டன. பெரும் தமிழறிஞர்களாகிய ராகவய்யங்கார், பண்டிதமணி, டாக்டர் உ.வே.சா போன்றவர்கள் இப்பல்கலைக்கழகத்தில் பணியாற்றித் தமிழ் வளர்த்தார்கள்.

கானாடு காத்தான் அரசராகிய ராஜா. ஸர். அண்ணாமலைச் செட்டியார் தமிழிசை இயக்கத்திற்குத் தலைமை தாங்கி நடத்தினார். இசைக்காக ஒரு கல்லூரி நிறுவினார். தமிழிசை ஆராய்ச்சிக்கு அடிகோலினார். இதற்காகப் பெரிய மாநாடுகள் நடத்தினார். மேடைகளில் தமிழிசையே ஒலிக்க வழி வகுத்தார். இசை பற்றிய பல நூல்கள் வெளி வந்தன. தமிழிசை இயக்கத்தால் எழுந்ததே ''யாழ்நூல்'' இதனை எழுதியவர் ஈழத்து விழலானந்த அடிகளாவர்.

அண்ணாமலைச் செட்டியார் கண்ட பல்கலைக்கழகம், தமிழிசை இயக்கம் ஆகிய இவ்விரண்டும் தமிழ் மக்களைப் பெரிதும் மொழிப் பற்றுடையவர்களாக ஆக்கின என்பது மிகையன்று.

# அவினாசிலிங்கம் செட்டியார்

இந்தியா விடுதலை பெற்றபின் சென்னை ராஜதானி யின் முதல் கல்வி அமைச்சராகப் பொறுப்பேற்றவர் தி.சு. அவினாசிலிங்கம் செட்டியார் ஆவர். விடுதலைக்கு முன்பே மத்திய மாநில சட்டசபைகளில் இடம்பெற்றுப் பணி புரிந்தவர் இவர்.

அவினாசிலிங்கனார் கல்வி அமைச்சராக வந்த பின்னர் தமிழ் வளர்ச்சிக்குப் பல்வகைத் தொண்டுகள் செய்தார். இவர் காலத்தில் தமிழுக்குப் புதுவாழ்வு வந்தது என்பது மிகப் பொருத்தமாகும். இந்திய மொழிகளில் முதன் முதல் தமிழில்தான் கலைக் களஞ்சியம். இவரது பெருமுயற்சியால் கொண்டுவரப்பட்டது. அது பத்துத் தொகுதிகளாக வெளி வந்தது. இவர் தமிழின் வளர்ச்சியில் நாட்டம் கொண்டு பாடுபட்டார். இவர் கல்வி அமைச்சராகப் பதவி வகித்த போது பள்ளிகளில் ஆறாம் வகுப்பிலிருந்து திருக்குறள் சொல்லிக் கொடுக்க ஏற்பாடு செய்தார். இவர் பாரதி யாரின் படைப்புகளை நாட்டுடமையாக்கிப் புகழ் கொண்டார். அரசின் சார்பாகப் பாரதியின் படைப்புகள் முதன் முதலாக வெளிவந்தன. தமிழ் வளர்ச்சிக்கான இவரது தொண்டுகளில் சில.

— தமிழாசிரியர்கள் பள்ளித்தலைமை ஆசிரியர்களாக வருவதற்காக இருந்த தடை நீக்கப்பட்டது.

— முதன் முதலில் ஆஸ்தான கவி பதவி உருவாக்கப் பட்டது. (நாமக்கல் வெ. ராமலிங்கம் பிள்ளை முதல் ஆஸ்தான கவிஞரானார்)

— ஆங்கில ஆசிரியருக்கு இணையாக தமிழாசிரி யர்க்கு ஊதியம் உயர்த்தினது.

— சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழுக்குப் பேராசிரியர் பதவி உருவாக்கப்பட்டது.

— மாநில மொழியே பாடமொழி என அறிவித்தது.

— முதன் முதலாகக் குழந்தைகள் கலைக்களஞ்சியம் உருவாக்கப்பட்டது.

— கி. வா. ஜகந்நாதன் தலைமையில் திருக்குறள் ஆய்வு செய்யப்பட்டது. 1020 பக்கங்களில் ஆய்வு நூல் 1963-ல் வெளியிடப்பட்டது.

— தமிழின் பல்துறை வளர்ச்சிக்குத் "தமிழ் வளர்ச்சிக் கழகம்" ஏற்படுத்தப்பட்டது.

— நூலக இயக்கச் சட்டம் கொண்டு வந்தது.

இப்படித் தமிழ் வளர்ச்சிக்குப் பாடபட்ட அவினாசி லிங்கனார் கல்விக் கழகங்கள் பல கண்டு கல்வி வளர்ச்சிக்கும் உதவினார். "ஸ்ரீ இராமகிருஷ்ணா வித்யாலயம்" "ஸ்ரீ அவினாசி லிங்கம் மனையியல் மகளிர் கல்லூரி" ஆகியவை யும் வேறு கல்வி நிலையங்களும் ஏற்படுத்தினார்.

இவரது தொண்டுகளைப் பாராட்டி இந்திய அரசு இவருக்குத் 'தாமரைத்திரு' (பத்மபூஷன்) விருதை அளித்துச் சிறப்பித்தது. செந்தமிழ்ச்செல்வர், 'தமிழ்ச் செம்மல்' என்னும் விருதுகளும் இவரைத் தேடி வந்தடைந்தன. தமிழ்ப் பல்கலைக்கழகம் டாக்டர் (D Litt) பட்டம் வழங்கிச் சிறபபித்தது. ஜம்னாலால் பஜாஜ் விருதும் இவருக்கு அளிக்கப்பட்டது. அமைதியான முறையில் தமிழ் வளர்ச்சிக்குப் பாடுபட்ட நமது அவினாசி லிங்கம் என்னும் வள்ளலை நாம் போற்றுதல் செய்வோம்.

# புலவர் கீரன்

குண்டான சிவந்த மேனியழகர், வெற்றிலை போட்டுக் குதப்பிய வாய். கால் குறைபட்ட தோற்றம். வாக்கு வன்மை; பல நூல் அறிவு. வாதத்திறன்; மணிக் கணக்கில் பேசும் திறன் நகைச்சுவை - இவர் புலவர் கீரன் ஆவர். பௌராணிக மரபில் புராண இதிகாசங்களைப் பற்றிப் சொற்பொழிவு செய்யும்போது பலரும் மெய்மறந்து கேட்டு மகிழ்வர்.

ம. பொ. சிவஞானத்தின் தமிழரசுக் கழகத்தில் இருந்து பணிபுரிந்த கீரன் - அக்கழகத்தின் இதழான "செங்கோலில் தொடர்ந்து எழுத்துப் பணி புரிந்தார் - ஆங்கிலமும் தமிழும் வல்லவர். வில்லி பாரதம், கம்பராமாயணம் போன்ற இதிகாசங்களில் ஆழ்ந்து தோய்ந்து விளங்கினார். 'கம்பராமாயணக் களஞ்சியம்'' என்பது புலவர் கீரன் சுவைத்த. கம்ப சூத்திரங்களின் தொகுப்பாகும். இந் நூலுக்குப் புலவர். அ. அருணகிரி அணிந்துரை வழங்கி யுள்ளார். சிரிப்பும் சிந்தனையும், மனிதனாகப் பிறப்பேன், இலக்கியத்தில் இறையுணர்வு வைரக்கல், திருவிளையாடல், செல்வம் அளிக்கும் செவ்வேள் முருகன், ஸ்ரீ ஐயப்பன் ஆதார வரலாறு கம்பன் விட்ட அம்புகள் இவர் எழுதிய நூல்களாம்.

மேஜையைத் தட்டித் தட்டிப் பேசும் இவர் பல நூற்று கணக்கான மேடைகளை அலங்கரித்துள்ளார்

## கோவைக் கம்பன்

கோவைக் கம்பர் கோயம்புத்தூரைச் சேர்ந்த பி. ஜி கருத்திருமன் என்பவர் ஆவர். அவர் ஒரு காலத்தில் சென்னைச் சட்டசபையில் உறுப்பினராக இருந்தார். கம்பனிடத்தில் தீராக் காதலராக இருந்த கருத்திருமன் 1963-இல் கம்பர் என்னும் நூலை வெளியிட்டார். தான் சுவைத்த கம்பன் கவிதைகளைத் தொகுத்து அழகிய விளக்கத்துடன் எழுதப்பட்டதுதான் கம்பன் என்னும் நூலாகும். ஆங்கில அறிவு வாய்க்கப் பட்ட கருத்திருமன் ஆங்கிலக் கவிஞர் பலருடன் ஒப்பிட்டு கம்பன் கவிதை களுக்கு விமர்சனம் எழுதினார். சிறப்பாக மில்டனுடன் கம்பனை ஒப்பிட்டுள்ளார். சிறந்த பேச்சாளரும் ஆகிய பி. ஜி. கருத்திருமன் கம்பரைப் பற்றிய மேடைகளை அலங்கரித்தார். அரசியலில் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்திருந்தாலும் இலக்கியத்தைத் தன் மன அமைதிக்கும் சுவைக்குமாகப் பயன்படுத்திக் கொண்டார். இலக்கியம் கற்றவர் அரசியல் நடத்தினால்தான் குடிதழீகி ஆளும் தகுதியைப் பெறுவர் என்பது தெளிவு.

## வை. மு. கோதைநாயகி

இந்த நூற்றாண்டில் எழுத்துலகில் பெரும் புரட்சி செய்த பெண் எழுத்தாளர் வை. மு. கோதைநாயகி யாவர். இவர் 1-12-1901 இல் பிறந்தார். வை. மு. கோதை நாயகி ஓயாமல் எழுதிக் கொண்டிருந்தார் நூற்றுக்கும் மேலான (115) கதை நூல்களை அவர் எழுதினார் என அறிகிறோம். சிறந்த பேச்சாளராகவும் சமுதாயத் தொண்ட ராகவும் இசையரங்குப் பாடகராகவும் அவர் விளங்கினார். இந்திய விடுதலைப் போராட்டத்தில் பங்கு கொண்டு

சிறைக்கும் சென்றார். நாடக ஆசிரியராகவும் விளங்கினார். இசைப் பாடல்களை இவரே இயற்றிப் பாடியதாகவும் அறிகிறோம்.

இவர் கடைசியாக எழுதிய நாவல் "கிழக்கு வெளுத்தது" என்பது. துப்பறியும் ராஜாராம் நாயுடு, குளிர்ந்த நெஞ்சம் ஆகிய இரு நாவல்களும் முழுமை பெற வில்லை. இவரது நாவல் பட்டியல் மிகப் பெரிதாகலின் சிலவற்றை இங்கே குறிக்கின்றேன்.

| | |
|---|---|
| இந்திர மோகனா | பத்மசுந்தரம் |
| சண்முக விஜயம் | உத்தம சீலன் |
| சாந்தகுமாரி | அன்பின் சிகரம் |
| இதயஒலி | ஆத்ம சக்தி |
| இன்ஜோதி | ஓவியப் பரிசு |

கஸ்தூரி திலகம் முதலியின. காந்தி கீர்த்தனைகள் நூறு' என்பது இசைப் பாடல்களாம்.

தமிழில் நாவல் இலக்கிய வளர்ச்சிக்குக் கோதை நாயகி பெரிதும் தொண்டியற்றியிருக்கிறார்.

## முனைவர் வா. செ. குழந்தைசாமி

இந்திரா காந்தி திறந்தவெளிப் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தர் முனைவர் வா. செ. குழந்தைசாமி ஒரு தமிழ் ஆர்வலர். நல்ல சிந்தனையாளர், செயல்வீரர் இனிய கவிஞர். இவர் சென்னை அண்ணா பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராகவும் இருந்தார்.

தமிழ் மொழி வளர்ச்சியில் ஆர்வம் கொண்ட குழந்தைசாமி தமிழ் வளர்ச்சிக்கு ஆக்கம் தரும் கருத்து களைக் கூறி வருகிறார். தமிழில் அறிவியல் வளர வேண்டும்

என்பதும் அவரது விருப்பம். தமிழ் வளர்ச்சி, தமிழனது முன்னேற்றம் அறிவியல் வளர்ச்சி, ஆகிய கருத்துகளைத் தாங்கிய கவிதைகள் பல வந்திருக்கின்றன. அக்கவிதைகள் மூன்று தொகுதிகளாக. வெளியிடப் பட்டுள்ளன. குலோத்துங்கன்' என்னும் புனை பெயரில் கவிதைகளை எழுதி வந்தார்.

இவரது கட்டுரைகள் பல ''அறிவியல் தமிழ்'' என ஒரு தொகுப்பு நூலாக வெளி வந்துள்ளது. மேலும் பாரதியின் அறிவியல் பார்வை, 'வளர்க தமிழ்' போன்ற நூல்களும் எழுதியுள்ளார் குழந்தைசாமியின் அணுகுமுறை ஒரு தனித்தன்மை வாய்ந்தது. வாயில் திறக்கட்டும், தமிழ் எழுத்துச் சீரமைப்பு வாழ்வும் வளமும் இவரது மற்ற படைப்புகளாம். இவரது தமிழிலக்கியப் படைப்புக்காக யாழ்ப்பாணப் பல்கலைக் கழகம் டி.லிட் என்னும் சிறப்பு முனைவர் பட்டத்தை அளித்துச் சிறப்பித்துள்ளது. உலகக் கலை பண்பாட்டுக் கழகம் (world Aeaderny of Arts and culture) 198; ஆம் ஆண்டு ஏதன்ஸ் நகரில் நடந்த மாநாட்டில் இவருக்கு மற்றொரு டி.லிட் (D.Litt) என்னும் சிறப்பு முனைவர் பட்டம் அளித்துள்ளது குறிப்பிடத் தக்கது.

## பெருஞ்சித்திரனார்

'மொழி ஞாயிறு எனப் போற்றப்படும் தேவநேயப் பாவாணர் வழியில் தனித்தமிழ் ஆர்வலராகத் திகழ்ந்தவர் பெருஞ்சித்திரனார். மறை மலையடிகளார், முதலாகக் கொண்டு வருகின்ற தனித்தமிழியக்கத்தில் மிகத் தீவரமாக இருந்து அவ்வியகத்திற்குப் பலரைக் கொண்டு வந்தவர் அவரது மருமகனார் அருள், தமிழ மல்லன் போன்ற பலர் தனித்தமிழ் இயக்கப் பற்று மிக்கவர்களாக இருந்து தமிழின் வளர்ச்சிக்குப் பாடுபட்டு வருகின்றனர்.

'தென்மொழி' என்னும் இதழினை நடத்தி அதன் மூலம் தனித்தமிழினை வளர்த்தவர் பெருஞ்சித்திரனார் ஆவர் பல நூல்களை இயற்றியிருக்கிறார். பள்ளிப் பறவைகள் என்பது இவரியற்றிய குழந்தைப் பாடல்கள் அடங்கிய நூலாகும். பெருஞ்சித்திரனார் பாவியக் கொத்து, கொய்யாக்கனி, கனிச்சாறு, நூறாசிரியம் இளமை உணர்வுகள், பாவேந்தர் பாரதிதாசன், இலக்கியத் துறையில் தமிழ்வளர்ச்சிக்கான ஆக்கப் பணிகள் போன்ற ஏராளமான நூல்கள் எழுதியிருக்கிறார்.

தனித்தமிழீழம் ஏற்படுத்தப் படவேண்டு மென்பது பெருஞ்சித்திரனாரின் கருத்தாகும். எனவே அவ்வாறு தனிநாடு காணவேண்டு மென்னும் தமது கருத்தினை வலியுறுத்தும் விதத்தில் தமிழீழம் என்னும் பெரு நூலினை வெளியிட்டுள்ளார். அது தொடர்பாக இவர் பேசிய பேச்சுகள் பல இத்தொகுப்பு நூலில் காணலாம்.

## வெ. சாமிநாத சர்மா

அறுபதுக்கும் மேலான நூல்கள் எழுதித் தமிழுக்கு அளித்த நல்ல தமிழ் எழுத்தாளர் இவர் வழியே புதுமை-யானது. பிறநாட்டு நல்லறிஞர் எழுதிய நூல்களைத் தமிழில் தந்தார் மேலும் பல அறிஞர்களின் வரலாறும் எழுதினார்.

17—9—1895 இல் பிறந்த இவர், சீனா துருக்கி, ரஷ்யா போன்ற நாடுகளின் வரலாறு எழுதினார் மார்க்ஸ், அட்டாடுர்க் ஆகிய பெருந்தலைவர்கள் தம் வரலாறுகளைத் தமிழில் தந்தார். இவர் பிளேட்டோ, ரூஸ்ஸோ, அரிஸ்டாட்டில் ஆகியவர்களைப் பற்றியும் அவர்களுடைய கருத்துகளைப் பற்றியும் எழுதினார் நாடகம் எழுதித் தமிழுக்கு அளித்தார். இவர் அறுபதிற்கு மேல் நூல்கள் எழுதியிருக்கிறார்.

# காவேரிப் பாக்கம் நமச்சிவாயர்

இந்த நூற்றாண்டின் தொடக்கக் காலத்தில் தமிழ் சொல்லிக் கொடுத்த ஒரு தமிழாசிரியர் மிடுக்காக உடையணிந்து சொந்த இன்ப ஊர்தியில் (Pleasure Car) பணிக்குச் சென்று வந்தார் எனக் கேள்விப்பட்டதுண்டா? ஆம் உண்டு. அவ்வாறு சொந்தமான ஊர்தியில் பயணித்து வந்தவர் 'தமிழ் ஞாயிறு' எனப் போற்றப்பட்ட காவேரிப் பக்கம் நமச்சிவாய முதலியார் என்பவரே. தமிழும் வறுமையுமாக வாழ்ந்த தமிழ்ப் பண்டிதர்கள் இடையில் நல்ல செல்வாக்கும் செல்வச் செழிப்பும் கொண்டு வாழ்ந்தவர் நமது நமச்சிவாயம் ஆவர்.

நமச்சிவாய முதலியார் தமிழுக்குப் பெருமளவில் தொண்டு செய்திருக்கின்றார். அக்காலத்தில் குழந்தைகளுக்காக எழுதப்படும் தமிழ் நூல்களைக் கூட ஆங்கிலேயரே எழுதி வந்தனர். நமச்சிவாயர் அதனை மாற்றித் தாமே முதன் முதல் தமிழ்ப்பிள்ளைகளுக்கான பாட நூல்களை எழுதினார். தமிழில் பாட நூல்கள் எழுதிய முதல் தமிழரும் இவரே. இப்பாட நூல்கள் தரமானவையாகவும் அமைந்திருந்தன. இவர் தொல்காப்பியம் இளம்பூரணர் உரையைப் பதிப்பித்தார். தணிகைப் புராணம், தஞ்சை வாணன், கோவை இறையனார் களவியல் ஆகிய நூல்களும் இவரால் பதிப்பிக்கப்பட்டன.

இவர் பிரதிவிராஜன், கீசகன் முதலிய நாடங்களும் இயற்றினார். விருந்தோம்பலில் சிறந்து நின்ற நமச்சிவாயர், தம்மிடத்து உதவி தேடி வந்தவர்களுக்கு. உதவுவதில் தயங்குவதே இல்லை. இவர் வீட்டில் தொலைபேசி இருந்தது. அத்தொலைபேசியின் மூலம் பலருக்கு உதவிகள் செய்திருக்கிறார்.

சிறுகச் சிறுக ஆங்கிலமும் கற்றுக்கொண்ட இவர் ஆங்கில நூல்களைக் கற்றுத் தமிழுக்குப் பயன்படுத்திக் கொண்டார். சிறந்த சைவராகிய இவர் தீண்டாமையைப் பின்பற்றாதவராகவே வாழ்ந்தார். இவர் நெற்றியில் சந்தனப் பொட்டு இல்லாமல் வெளிவரமாட்டாராம்.

தமிழ் மட்டுமே படித்து வித்துவான் பட்டம் பெற இவர் பெரிதும் உழைத்தார்; வெற்றியும் பெற்றார். பல்கலைக் கழக மட்டத்தில் வித்துவான் தேர்வுகள் நடத்தப் பட்டன. சோம்பலும் தாழ்வு மனப்பான்மையும் கொண்டு வாழ்ந்த தமிழர் நாளங்களில் புதுக்குருதிப் பெருக்கெடுக்கப் பொங்கல் நாளைத் 'தமிழர் திருநாள்' எனக் கொண்டாடும்படி செய்தார். அவ்விழாவோடு இணைத்துத் 'திருவள்ளுவர் நாள்' கொண்டாடப்படவும் வழி வகுத்தார்.

''ஊருணியாகவும் பழந்தரும் மரமாகவும் நமச்சிவாய முதலியார் இருந்தார்'' எனப் பழம்பெரும் எழுத்தாளராகிய நாரண துரைக்கண்ணன் கூறியது மிகப் பொருத்தமே.

## கே. பாலதண்டாயுதம்

அண்ணாமலைப் பல்கலைக்கழகம் தந்த பெருந் தலைவர்களில் கே. பாலதண்டாயுதமும் ஒருவர். மாபெருஞ் சிந்தனையாளர். பொதுவுடைமைக்கொள் கையில் தீவிரவாதி. பல்கலைக் கழகத்தில் படித்துக் கொண்டிருக்கும் காலத்திலேயே அஞ்சா நெஞ்சத்தோடு வாழ்ந்தவர். அப் பொழுது துணைவேந்தராக இருந்தவர். வெள்ளி நாக்கு சீநிவாச சாஸ்திரி என்பவர் ஆங்கிலத்தில் Rt. Honourable Silver tongue Srinivasa Sastri'' என அவர் அழைக்கப்படுவது உண்டு. மாணவர் எழுச்சி

ஒன்றில் அந்தத் துணைவேந்தரை மறுத்து பாலதண்டாயுதம் Sastri! you are neigther right nor honourable என நெஞ்சத் துணிவோடு பேசிய புரட்சிப் புயல் ஆவர்.

இவர் சிறையில் பலவாண்டுகள் இருந்த காலத்தில் "தேனீ" என்னும் மிகப் பெரிய நூல் எழுதினார். ‘மார்க்ஸீய ஞானரதம்" என்பது அவரது மற்றொரு நூலாகும். ப. ஜீவானந்தனுடைய வாழ்க்கை வரலாறும் இவரால் எழுதப்பட்டுள்ளது.

இவரது பேச்சில் எரிமலைகள் வெடிக்கும்; சிந்தனைக் கதிர்கள் தெறிக்கும்; வாதங்களும் எதிர் வாதங்களும் போட்டி போட்டுக் கொண்டு வரும். தமிழர் செய்த தவக் குறைவின் காரணமாக அவர் விமான விபத்தொன்றில் மறைந்து போனார். மனித உரிமைகளுக்காகப் பாடுபட்ட நெஞ்சம் தீக்கிரையாகியது.

## பொன். பரமகுரு

காவல் துறையில் அதிகாரியாக இருந்த இவர் பல அரிய நூல்கள் எழுதித் தமிழ்மொழியை வளப்படுத்தினார். இவர் ஒரு சிறுகதை ஆசிரியர். நூற்றுக்கு மேற்பட்ட சிறு கதைகள் எழுதியிருக்கிறார். அறுபத்தைந்துக்கு மேற்பட்ட நாடகங்களை எழுதி ஒரு நாடக ஆசிரியராகவும் திகழ் கிறார். சிறந்த கவிஞராகிய பொன். பரமகுரு ஐந்து கவிதை நூல்களும் படைத்திருக்கிறார்.

தமிழர் பலரும் தமது வரலாறுகளை எழுதி வைப்ப தில்லை. பரமகுரு தமது காவல் துறை அனுபவங்களை எழுதியிருக்கிறார். இவர் பல பொருள்களைப் பற்றிக் கட்டுரைகள் எழுதியிருக்கிறார். இவரது நூல்களில்

நிதானமே நிம்மதி என்பதும் ஒன்று - காவல் துறையிலிருந்து ஒய்வு பெற்றும் எழுத்துத் துறையினின்றும் ஒய்வு பெறாமல் எழுதிக்கொண்டிருக்கிறார். அரசுத் துறைகளில் பெரிய பொறுப்புகளில் இருந்தவர்கள் தமது பட்டறிவுகளைத் தமிழில் எழுதித் தமிழுக்கு வளம் சேர்க்க வேண்டும்.

## சுப்பிரமணிய சிவா

ஆங்கிலேயருக்கு எதிரான 'சுதேசி' இயக்கத்தை நடத்திய வ. உ. சி. சுப்பிரமணிய சிவா போன்றவர்கள் தமிழ்மொழி வளர்ச்சியிலும் கவனம் செலுத்தினார்கள் என்பது வரலாற்று உண்மை. பத்திரிக்கைகளிலும் பிறவற்றிலும் எழுதப்படுகின்ற தமிழ் பிறமொழிக் கலப்பில்லாத தாக இருத்தல் வேண்டுமெனத்தான் ஆசிரியராக இருந்து நடத்திய 'ஞானபாநு' என்னும் பத்திரிக்கையில் தொடர்ந்து எழுதி வந்தார் நம் சிவா. அக்காலத்தில் (இந்நூற்றரண்டின் தொடக்கக் காலம்) பல ஆங்கில சொற்களைத்தமிழில் கலந்து சுதேசமித்திரன்' போன்ற இதழ்கள் எழுதியதைச் சிவா மிகக் கண்டித்தார்.

இவர் பல நூல்களை எழுதினார். 'எனது சிறைவாசம்' என்னும் நூலில் தாம் சிறை சென்றதற்கான காரணங்களை எழுதினார். தொழிலாளர் இயக்கத்தில் பெரும் பங்கு கொண்ட சுப்பிரமணிய சிவம் தமது சொல்லாற்றலால் பெரும் புரட்சிகளை உண்டாக்கினார் ஆத்மீகத் துறையில் ஈடுபாடு கொண்டு ''சச்சிதானந்த சிவம்'' என்னும் நூலெழுதினார். இவர் எழுதிய நூல்கள் பலவும் வடமொழி தலைப்புகள் கொண்டவை. வடமொழி ஆதிக்கத்தை இவர் எதிர்த்ததாகத் தெரியவில்லை மோக்ஷசாதனஇரகஸ்யம் ஞானரதம், பகவத் கீதா சங்கிரகம், ஸ்ரீ மாத்துவ விஜயம். ஸ்ரீ ராமநுஜ விஜயம்

என்பன அவரெழுதிய வடமொழி தலைப்பு கொண்ட தமிழ் நூல்களாம் விவேகானந்தரின் வரலாறும் (520பக்கம்) இவரால் எழுதப்பட்டது. இவர் இருபத்து மூன்று நூல்களுக்கு மேல் எழுதினார். ஞானபாநு, பிரபஞ்ச மித்திரன் முதலிய பத்திரிக்கை ஆசிரியராக இருந்து நடத்தினார்.

சுப்பிரமணிய சிவா தமிழார்வம் மிக்கவர் பாண்டித்துரை தேவரால் அமைக்கப்பட்ட தமிழ்ச்சங்க நடவடிக்கைகள் ஆங்கிலத்தில் அக்காலத்தில் நடத்தப் பட்டன. சுப்பிரமணிய சிவா இதனைக் கண்டித்தார். சைவசித்தாந்த மஹாசமாஜத்தில் சிவா தமிழர் ஆங்கிலத்தில் பேசியது குறித்தும் தமது எதிர்ப்பைக் காட்டினார். தனித்தமிழில் எழுதும் ஆர்வத்தை வளர்ப் பதற்காக ஒரு கட்டுரைப் போட்டியே நடத்தினார். பிற மொழிக் கலப்பின்றி எழுதப்படும் கட்டுரைக்கு ஐந்து ரூபாய் பரிசு என விளம்பரப் படுத்தினார். ஞானபாநுவில் அவ்விளம்பரம் (ஜுலை 1915) வெளியிடப்பட்டது. சஜம் கயமாகியதிரிச் சொற்களையும் கலத்தல் கூடாது என விளம்பரம் வந்தது பெரிதும் சிந்திக்கத் தக்கது

## பெ. சு. மணி

பெ. சு. மணி ஒரு சிறந்த எழுத்தாளர். புதிய சிந்தனை ஓட்டத்தையும் ஆராய்ச்சித் திறனையும் இவரது நூல்களில் காணமுடியும். சிறந்த உழைப்பாளி. பல செய்திகளைத் துருவித் துருவி ஆராயும் இயல்பினர். பழமையான வரலாற்று உண்மைகளைக் கண்டு எழுதுபவர். பல நூல்களுக்கு ஆசிரியர். எழுத்துக்கலை கைவந்தவர்.

பன்னிரண்டுக்கு மேல் நூல்களைப் படைத்தவர் பாரதியைப் பற்றி ஆய்ந்து எழுதியிருக்கிறார் "இந்திய

தேசியத்தின் தோற்றமும் வளர்ச்சியும்'' என்பது ஓர் ஆய்வு நூல். ஔவையார் என்னும் பெயரில் இரண்டு மூன்று ஔவையார்களைத் தமிழறிஞர் அறிவர். சங்ககால அவ்வையாரும் ஆத்திசூடி தந்த அவ்வையாரும் வெவ் வேறானவர் என்பது அறிவோம். மணி அவர்கள் சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும் என்னும் நூலைப் படைத்தளித்துள்ளார். பாரதி பற்றி எழுதிய நூல்களில் ஒன்று ''அறிஞர்கள் பார்வையில் பாரதி'' என்பது.

சுப்பிரமணிய சிவாவைப் பற்றிய அரிய பல செய்திகள் அடங்கிய நூலும் இவரால் எழுதப்பட்டுள்ளது. ''வீரமுரசு சுப்பிரமணிய சிவா'' என்பது அதன் பெயர். அக்காலத்து அரசியலும் தேசிய எழுச்சியும் இந்த நூலால் அறிகிறோம். மற்றும் சிவா தமிழ் மொழியைப் பற்றிக் கொண்டிருந்த கருத்தும் இங்கே விரிவாக ஆராயப்படுகிறது. மணி இராம கிருஷ்ண இயக்கத்தின் வரலாறு எழுதியிருக்கிறார். 'இலங்கையில் இராமகிருஷ்ண இயக்கம் என்பது அண்மையில் எழுதப்பட்ட ஒரு நூலாகும்'.

## புதுவைச் சிவம்

பாரதிதாசனின் தலைசிறந்த மாணவர்களில் 'புதுவைச் சிவம்'என்னும் ச.சிவப்பிரகாசம் ஒருவராவர் பாரதிதாசனின் கவிதைத் தொழிலுக்குப் பக்கப்பலமாக இருந்து அவரது கவிதைகள் தொலைந்து போகாமல் காத்தவர். இதனைப் பாவேந்தர் ஒருமுறை குறித்துக் காட்டியிருக்கிறார். சிறந்த தமிழறிஞராகிய புதுவைச்சிவம் தமிழிலக்கிய இலக்கணங் களைப் பிறருக்குப் பாடஞ்சொல்லியிருக்கிறார். இவர் காட்சிக்கு எளியர் கடுஞ்சொல்லர் அல்லர், பகுத்தறிவுப் பாசறையின் தொண்டர் பொதுத் தொண்டாற்றி பெரியவர். அமைதியே உருவானவர். பழகுவதற்கு இனியர்

பொறுமையில் இமயத்திலும் உயர்ந்தவர் கொள்கைப் பிடிப்புள்ளவர். சாகும்வரை திராவிட இயக்கத்தை விட்டு ஓடாதவர். புதுச்சேரியின் சார்பில் பாராளுமன்ற மேல் சபையின் உறுப்பினராகவும் இருந்தவர் புதுச்சேரி நகர மன்றத் துணைத் தலைவராக இருந்தவர் சிறந்த ஆசிரியர்.

''புதுவைச் சிவம்'' வெள்ளையர் ஆதிக்கத்தை எதிர்த்து போர்க்கொடி யுயர்த்தியவர் இந்தி எதிர்ப்புப் போரினை முன்னணியில் இருந்து நடத்தியவர். இவற்றிற்கு எல்லாம் மேலாகத் தமிழ் வளர்ச்சிக்குப் பாடுபட்டவர். இவர் சிறந்த கவிஞராகத் திகழ்ந்தார் ''பெரியார் பெருந்தொண்டு'' ''மறக்குடி மகளிர்'' ''ஈரோட்டுப் பாதை'' என்னும் கவிதைத் தொகுதிகளைச் 'சிவா' வெளியிட்டார். 'சிதைந்த வாழ்வு' என்னும் நாடகத்தை எழுதி அரங்கேற்றினார். வேறு சில நாடகங்களுக்குப் பாடல்கள் இயற்றித் தந்தார்.

இதழாசிரியராகவும் சிவப்பிரகாசனார் இருந்து பணி செய்தார். 'புதுவை முரசு' என்பது அவ்விதழின் பெயர். ஞாயிறு பதிப்பகம் என ஒன்று ஆரம்பித்து ''தமிழர் தன் மதிப்புப் பாடல்கள்'' வெளியிட்டிருக்கிறார் கைம்மை வெறுத்த காரிகை, மறுமலர்ச்சிக் கவிதைகள், காதலும் கற்பும், திராவிடப்பண் முதலிய கவிதை நூல்களும் இவரால் எழுதப்பட்டன. தமிழ் நாடு அரசு இவருக்குப் ''பாரதிதாசன் விருது'' அளித்துச் சிறப்பளித்தது.

# சி. நயினார் முகம்மது

கி. ஆ. பெ. விசுவநாதம் ஏற்படுத்திய புலவர்க்குழு என்னும் அமைப்பின் உறுப்பினராக இருப்பவர் சி. நயினார் முகம்மது என்னும் தமிழ்ப் பேராசிரியர், மெலிந்த உயர்ந்த உருவம் உடையவர். எளிமையும் பொறுமையும் உடையவர். தமிழில் வல்ல சான்றோர். திருச்சி ஜமால் முகம்மது கல்லூரியில் முதல்வராகப் பணியாற்றியவர், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழமத்தில் நாடகத்துறையில் ஆராய்ச்சி அறிஞராக இருந்து பணி ஆற்றும் பெரியவர் 'பெரும்புலவர்' என்றே அழைக்கப்படும் பெற்றியவர். இசுலாமியத் தமிழிலக்கிய மாநாடுகள் ஐந்தும் நடைபெறப் பெருந்துணையாக இருந்து சிறப்புற நடத்தியவர். தமிழைத் தெளிவாகவும் வெண்கலம் போலக் கணீர் என்றும் ஒலிக்கும் நாவினர்.

இவர் "குணங்குடி மஸ்தான்- தாயுமானவர் பாடல்கள் ஓர் ஒப்புநோக்கு" என்னும் ஆய்வுக்கு முனைவர் பட்டம் பெற்றார். பல கருத்தரங்குகளிலும் பங்கு கொண்டு ஆய்வுக் கட்டுரைகள் படிப்பவர். கருத்தரங்குகளை நெறிப்படுத்துபவராகவும் தொண்டு செய்தவர். நயினார் முகம்மது "புவியெங்கும் பொங்குக" 'மக்கள் மன்றம், என்னும் நூல்கள் இயற்றியுள்ளார்

அமெரிக்கா உள்படப் பல நாடுகளுக்குப் பயணம் செய்தவர் இவருக்குத் "திருக்குறள் நெறித்தோன்றல்" என்னும் பட்டம் அளிக்கப் பட்டுள்ளது.

# ந. சுப்பு ரெட்டியார்

பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் ஒரு தமிழ்ப் பேரறிஞர். பள்ளி ஆசிரியராக இருந்து பின்பு அழகப்பா கல்லூரியில் பணியாற்றியவர். திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் பதினைந்து ஆண்டுகளுக்கு மேல் தமிழ்த் துறைத்தலைவராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். முதிர்ந்த வயதிலும் சுறுசுறுப்பு மிக்கவர். தூங்கும் நேரம் தவிர நாள் முழுவதும் எழுதிக் கொண்டிருப்பவர். எளிமையும் அமைதியும் கொண்டவர். ஆழ்வார் தமிழில் ஈடுபாடு கொண்டவர். நம்மாழ்வார் தத்துவத்தை ஆராய்ந்து முனைவர் பட்டம் பெற்றவர் எண்பதுக்கு மேற்பட்ட நூல்களுக்கு ஆசிரியர்.

தமிழிலக்கியம், அறிவியல், வரலாறு, ஆன்மீகம் போன்ற பலதுறைகளிலும் பயிற்சி உடையவர். அப்பல் துறைகள் பற்றியும் நூல்கள் எழுதியவர். ''நினைவுக் குமிழிகள்'' எனத் தமது வரலாற்றை எழுதியிருக்கின்றார். ஆசிரியப் பள்ளியில் பணிபுரிந்த ரெட்டியார் தமிழ் பயிற்றும் முறை, கவிதை பயிற்றும் முறை எனப் பல நூல்கள் எழுதியிருக்கின்றார். கவிஞன் உள்ளம், அறிவுக்கு விருந்து, திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும், கம்பனின் மக்கள் குரல், பரணிப் பொழிவுகள் சில நோக்கில் நாலாயிரம், வைணவமும் தமிழும் தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, புதுக்கவிதை போக்கும் நோக்கும், பாரதீயம், போன்றவை இவரது படைப்புகளாம் அறிவியல் துறையிலும் இவர் நூல்கள் எழுதியிருக்கிறார். ''அறிவியல் தமிழ்'' ''அணுவின் ஆக்கம்'' என்பன அவற்றுள் சிலவாம் அறிவியில் விருந்து என்பது மற்றொன்று.

அருந்தமிழ் நூல்களை அன்றி இவர் நாற்பதுக்கு மேல் தமிழில் ஆய்வுக் கட்டுரைகள் எழுதியிருக்கிறார் மேலும்

முந்நூறுக்கு மேல் பொதுக் கட்டுரைகளும், வரைந்துள்ளார் சுப்பு ரெட்டியார் ஆங்கிலத்திலும் பல நூல்களும் ஐம்பதுக்கு மேல் ஆய்வுக் கட்டுரைகளும் எழுதியுள்ளார். இன்றும் எழுதிக் கொண்டே இருக்கிறார்.

வைணவத்தில் தோய்ந்தவராயினும் சமசர நோக்கு உடையவர் நம் சுப்பு ரெட்டியார் ஆழ்வார்கள் அமுதம் எழுதிய மூச்சில் திருநாவுக்கரசரைப் பற்றியும் ஓர் அரிய நூல் படைத்துள்ளார்.' வாழையடி வாழை' என்னும் மற்றொரு அறிவியல் நூல் இவரால் எழுதப் பட்டுள்ளது. 1978 – 1979 – ஓராண்டுக் காலம் கலைக் களஞ்சியத்தின் பதிப்பாசிரியராகப் பணியாற்றிய ரெட்டியார் சில நூல் களுக்கும் பதிப்பாசிரியராகப் பணியாற்றியுள்ளார். முத்தொள்ளாயிர விளக்கம் என்பது ஒன்று.

சுப்பு ரெட்டியார் ஒன்று முதல் ஐந்து வகுப்புகளுக்குப் பாடநூல் எழுதியிருக்கிறார். இவ்வாறு மூத்தும் இளை ஞராக விருந்து தமிழ்த் தொண்டு இயற்றிக் கொண்டிருக் கிறார்.

## காரை. இறையடியான்

முகம்மதலி என்னும் இயற்பெயரை உடைய காரை. இறையடியான் காரைக்காலில் பிறந்தவர், இவரது பாட்டனார் சாயபு மரைக்காயர் என்பவர் ஒரு பெருங்கவி-ஞராகத் திகழ்ந்தவர். இவரது இளவலே பன்னூல்களுக்கு ஆசிரியரான சாயபு மரைக்காயர் என்னும் ஒரு கல்லூரிப் பேராசிரியர்.

தமிழார்வம் மிக்க முகம்மதலி தம் பெயரைத் தமிழாக்கிக் கொண்டார். பாவாணர், பெருஞ்சித்திரனார் போன்றவர்தம் கூட்டுறவினால் தனித் தமிழின் ஆர்வல

ரானார். இசுலாமிய மார்க்க அறிவும் தமிழ்ப் புலமையும் கொண்ட இவர் பல தனித்தமிழ் நூல்களை யாத்திருக்கிறார். இவரது ,நபிமணிக் குறள்' என்னும் நூல் தமிழ் நாடு அரசின் பரிசு பெற்றிருக்கிறது. நபிகள் பெருமானாரின் வாக்குகளைத் தொகுத்துக் குறட்பாவில் வடித்துத் தரப்பட்டது இந்நூலாகும் எழுநூறு குறட்பாக்களுக்கு மேல் இதில் உள்ளன. இளந்தென்றல்' என்பது குழந்தைகளுக்காக எழுதப்பட்டது. இந்நூலுக்குச் சென்னைக் குழந்தை எழுத்தாளர் சங்கத்தின் வெள்ளிப் பதக்கம் கிடைத்துள்ளது. திருநபி இரட்டை மணிமாலை, திருவருட்பாவை என்பன காரை இறையடியானின் பிற நூல்களாகும். 'வாழ்வியல்' என்பதும் கன்னித் தமிழ் வளர்த்த காரைக்கால் என்பதும் இவரது பாராட்டிற்குரிய நூல்களாகும்.

இவர் 'பூஞ்சோலை' என்னும் தனித்தமிழ் இலக்கிய இதழ் ஒன்று பல வாண்டுகள் நடத்திப் புகழ் பெற்றார், இவருக்குத் தனித்தமிழ் தென்றல், கவிமாமணி, பாவலர் மணி முதலிய விருதுகள் அளிக்கப்பட்டுள்ளன. காரைக்கால் பகுதியின் தமிழ் இயக்க அமைப்பின் தலைவராக இருந்து பணி செய்தார்.

## க. தமிழ மல்லன்

தனித் தமிழ் இயக்கத்தோடு தன்னை இணைத்துக் கொண்டவர் க. தமிழ மல்லன் தேவநேயப் பாவாணர், பெருஞ்சித்திரனார் ஆகியோருடன் இவருக்கு இளமை முதலே நெருங்கிய தொடர்புண்டு.

இவர் படிப்பில் பேரார்வம் உடையவர். முதன் நிலைத் தமிழாசிரியராகப் பணியாற்றும் இவரிடத்தில் ஆயிரத்திற்கும் மேலான நூல்கள் உள்ளன. எங்கும் எதிலும் தமிழிருத்தல் வேண்டுமென விழையும் இவர் பல தனித்

தமிழ் நூல்களை எழுதியிருக்கிறார். சிறுகதை, ஆராய்ச்சி, சிறுவர் இலக்கியம் அகர முதலி முதலிய துறைகளில் இவரது நூல்கள் வந்திருக்கின்றன. இனிய எளிய தமிழில் இந்நூல்கள் அமைந்திருக்கின்றன. இவரது நூல்களின் பட்டியல் நீளுமாகையால் அவற்றுள் சில இங்குக் குறிப்பிடப்படுகின்றன. வந்திடுவார், பரிசு-இவை சிறுகதை நூல்கள். தனித்தமிழ், பாவாணர் பெருமை பாவேந்தரும் தனித்தமிழும் இவை ஆராய்ச்சி நூல்களிற் சில தனித்தமிழ்த் தந்தையின் கதை, தேன் சிட்டு இவை குழந்தைகளுக்கான தமிழ் நூல்கள் தனித்தமிழ் வளர்ச்சி, தனித்தமிழ் எழுத்தாளர் அகர முதலி, விருந்து—இவை தொகுப்பு நூல்களிற் சிலவாம் தனித்தமிழ் பெயர் அகர முதலி, தனித்தமிழ் அகர முதலி-அகரமுதலிகள். வெற்றிச் செல்வி என்பது பாவியம்.

தமிழ் மொழி வளர்ச்சிக்குப் பல தொடர் சொற்பொழிவுகளை நடத்தி வருகின்றார். பத்துப் பாட்டு, எட்டுத் தொகை, பதினெண்கீழ்க்கணக்கு முதலிய தொடர் சொற்பொழிகள் இவரால் நடத்தப்பட்டன. பெயர்ப் பலகைகளில் தமிழிருக்க வேண்டுமென தொடர்ந்து கடை உரிமையாளர்களைச் சந்தித்து வேண்டுகோள் விடுக்கின்றார்.

தனித்தமிழ் வளர்ச்சிக்கென 'வெல்லும் தூய தமிழ்' என்னும் பெயரில் திங்கள் இதழ் ஒன்று நடத்தி வருகின்றார். மறைமலையடிகள் பிறந்த நாளன்று புதுச்சேரி வானொலி நிலையம் மறைமலையடிகள் பற்றிய நிகழ்ச்சி ஒன்று ஒலிபரப்ப நிலையத்தாரோடு பேசி ஏற்பாடு செய்திருக்கின்றார். புதுவைப் பல்கலைக்கழகம் பாவாணர் விழா நடத்துவதற்கும் இவர் தூண்டுகோலாக இருந்திருக்கிறார்.

இளமை மாறாத தோற்றத்தவராகிய தமிழமல்லன் தமிழ் வளர்ச்சிக்குப் பல்வகையாலும் சுறுசுறுப்போடு தொண்டு செய்து வருவது குறிப்பிடத்தக்கது. இவரது தமிழ்த் தொண்டினைப் பாராட்டி மகிழ்வோம்.

# அருளி

பாவாணர் வழியைப் பின்பற்றும் இவர் தனித்தமிழ் இயக்கத்தைச் சார்ந்தவர். தென்மொழி ஆசிரியர் பெருஞ் சித்திரனாரின் மருமகனாவர். இளமை முதல் அஞ்சா நெஞ்சம் கொண்டு தமிழுக்காகப் போராடியவர். தமிழ் நெஞ்சம் கொண்டவர். இன்று இவர் தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் அகர முதலி (அகராதி) தொகுப்பின் தலைமைப் பதிப்பாளராகப் பணியாற்றி வருகிறார். தன்னூக்கம் மிகுந்த இவர் பழகுதற்கு இனியவர்

இவர் சொல்லாராய்ச்சியில் சிறந்து விளங்குகின்றார். இவர் பல நூல்கள் எழுதியிருக்கின்றார் எவை தமிழ் என்பதைக் காட்ட 'இவை தமிழல்ல' என்றொரு நூல் இவரால் எழுதப்பட்டுள்ளது. 'தகுதி' என்னும் சொல்லைத் திறனாய்வு செய்து 'தகுதி' எனும் நூலினைப் படைத்திருக் கிறார். இவரது வானொலி உரைகள் தொகுக்கப்பட்டு நூலாக வெளிவந்திருக்கிறது ஈழத் தமிழருக்குப் பரிந்து பேசும் அருளி, 'சிங்கள அமர்க்களம்' என ஒரு நூலும் படைத்துள்ளார்.

சொல்லாராய்ச்சித் துறையில் முன்னேறிச் செல்லும் அருளிக்கு நல்ல எதிர்காலம் உண்டு.

## எ. சோதி

காவேரிப்பாக்கம் நமச்சிவாய முதலியார்தாம் குழந்தைகளுக்கான பாடல்களை முதன் முதல் எழுதியதாக அறிகிறோம் இன்று குழந்தைகளுக்கு எழுதுகின்றவர் தொகை வளர்ந்து வருகிறது. அவ்வாறு குழந்தைகளுக்கு எழுதுகின்றவர்களில் எ. சோதி முன்னணியில் நிற்கிறார். இவர் இதுவரையிலும் நூற்றைம்பது கதை நூல்களைக் குழந்தைகளுக்குத் தந்திருக்கிறார். அழகிய முகப்புடன் இந்நூல்கள் வெளியிடப்படுகின்றன.

சிறுவர்களுக்காக எழுதும் இவர் ஒரு கல்லூரிப் பேராசிரியர் என்பது அறிதல் வேண்டும். பஞ்சதந்திரக் கதைகள், விக்கிரமாதித்தன் கதைகள் ஆகியவை சிறுவர்கள் மொழியில் அவர்கள் விரும்புமாறு இனிமையாகவும் எளிய நடையிலும் தரப்பட்டிருக்கிகின்றன. சோதி அவர்கள் புதிர்க் கதைகள் எழுதுவதில் சிறந்து விளங்குகின்றார். இவர் பல சிலேடைகளையும் தொகுத்துச் சிறுவர் படித்துப் புரிந்து கொள்ளுமாறு எழுதியிருப்பது குறிப்பிடத்தக்கதாம். இவருடைய நூல்கள் பல தமிழ்நாடு அரசின் பரிசுகள் பெற்றுள்ளமை ஓர் இனிய செய்தியாகும். இவருடைய நூல்கள் பலவும் நூறு பக்கங்களுக்கு உட்பட்டனவாகவே இருக்கும். சிறுவர்கள் ஒரே மூச்சில் படித்து முடிப்பதற்கு ஏற்ற வகையில் இவை அமைந்துள்ளன. இந்நூல்கள் பல பதிப்புகளைக் கண்டு வருகின்றன.

நன்னெறிகளை வளர்ப்பதற்கும் பொழுது போக்காகச் சிரித்து மகிழுதற்கும் அறிவுக் கூர்மை பெறுதற்கும் இவரது கதைகளும் புதிர்களும் அமைந்துள்ளன. இவர் நாடகமும் எழுதியிருக்கிறார். 'சிலேடைச் சின்னசாமி' என்பது ஒரு சுவையுள்ள நாடக நூலாகும். ஓயாமல் எழுதிக் கொண்டிருக்கும் இவர் ஒங்கு தமிழுக்கு ஓராயிரம் நூல்களை எழுதித் தரும் ஆற்றல் பெற்றவர்.

# வில்லிசைச் செல்வர் பட்டாபிராமன்

'வில்லுப் பாட்டு' என்பது நம் நாட்டு நாட்டுப்புறக் கலைகளில் ஒன்று. மக்களைச் சிரிக்க வைத்துச் சிந்திக்க வைப்பது இவ்விசை நிகழ்ச்சியின் தலையாய நோக்கங்களில் ஒன்றாகும். நல்ல குரல் வளமும் பேச்சுத் திறமையும் பக்க வாத்தியங்களும் இக்கலை சிறப்புறுவதற்கு வேண்டுவனவாகும்.

நல்ல குரல்வளமும் பேச்சுச் சாதுரியமும் நகைச் சுவையும் ஒருங்கே வாய்க்கப்பட்டவர் இ பட்டாபிராமன் என்னும் "கலைப் புலவ" ராவர். மேனிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றிய இயலிசைக் "கலைமாமணி என்னும் விருதுக்குரிய இவர் முத்தமிழிலும் வல்லவர். இனிமைமிகு பிரஞ்சு மொழியிலும் புலமை பெற்றவர். கட்டுரை வன்மையும் கவியாற்றலும் பெற்றவர். அறுபத்தைந்து அகவை உடையராகிய 'நல்லாசிரிய' ராகிய பட்டாபிராமன் இதுவரை இரண்டாயிரம் வில்லுப்பாட்டு நிகழ்ச்சிகளை நாட்டில் தமிழர் வாழும் பகுதிகளிலெல்லாம் நடத்திப் புகழ் பெற்றவர். எதையும் சுவைபட எடுத்து மொழியும் பெற்றியர்.

கவிஞர் சவராயலு நாயகர் நூற்று ஐம்பதாவது பிறப்பாண்டில் நடத்தப் பெற்ற கவிதை நூல் போட்டியில் 'காதற் பறவை' என்னும் காப்பிய நூலுக்குப் புதுச்சேரி அரசின் பரிசு பெற்றவர். இவர்தம் வில்லுப் பாட்டுகளின் தொகுதிகள் "வறுமையை ஒழிப்போம்," பாடித்தான் பாருங்களேன்" என்னும் பெயர்களில் வெளிவந்திருக்கின்றன. "சாதிகள் இல்லையடா" என்பது பட்டாபிராமனுடைய மற்றொரு நூலாகும். இவர் சிங்கப்பூர் மலேசியா நாடுகளுக்குக் கலைப் பயணம் மேற்கொண்டு பல வில்லுப்

பாட்டு நிகழ்ச்சிகள் நடத்தியிருக்கிறார். தம் அனுபவங்களை "வாருங்கள் மலேசியாவுக்கு" என்னும் நூல்வடிவில் வடித்திருக்கிறார். பயண நூல்கள் தமிழில் இன்னும் வருதல் வேண்டும் என்னும் கருத்தினைக் குறித்துக் காட்டுவது பொருத்தமே. கலை ஞானமணி என்னும் பட்டத்துக்குரிய இவர் குழந்தைகளுக்காகவும் நூல் எழுதியிருக்கிறார் "பிள்ளைகளே! உங்களுக்காக ! என்பது ஒரு குழந்தைக்கான நூலாகும்.

அரசு சார்பில் நடத்தப்படும் பல விழாக்களில் இவரது 'வில்லுப் பாட்டு'க் கலை நிகழ்ச்சி நடத்தப்படுவது ஒரு வாடிக்கையாகும். வேளாண் துறை, நலவழித்துறை, செய்தி விளம்பரத் துறை, ஆகிய அரசுத் துறைகளின் சார்பாகவும் இவர் வில்லுப் பாட்டு நடத்தியிருக்கிறார். திருக்கோயில் விழாக்களிலும் இலக்கிய மேடைகளிலும் வில்லுப் பாட்டு நடப்பது உண்டு. 'பாஞ்சாலி சபதம்' என்னும் தலைப்பில் நடத்தப்படும் வில்லுப் பாட்டு நிகழ்ச்சி மிக்க இன்பம் தரவல்லது. தானாகவே இசையைக் கற்றுக் கொண்ட இவர் நல்ல சாரீரத்தோடு பாடுவது கேட்டல் செவிக்கு இன்பம்

ஆசிரியர்களுக்கு நடத்தப்படும் பணியிடைப் பயிற்சிகளில் கருத்தாளராக இவர் தொண்டாற்றியிருக்கிறார். பழகுதற்கு இனியராகிய இவர் சீர்திருத்தத் திருமணங்களைத் தலைமை ஏற்று நடத்தியும் வருகிறார். தமிழ் ஓங்கி வளருவதற்கு இவர்தம் தொண்டும் மிகத் தேவை.

# ஐயன்பெருமாள் கோனார்

ஓர் அரை நூற்றாண்டுக் காலமாகச் செந்தமிழ் நாட்டுத் தமிழ் படிக்கும் மாணவர்களுக்குப் பக்கத் துணையாக இருந்து அவர்கள் தேர்வில் வெற்றி பெற உதவி வருவது ''கோனார்'' உரைகள் என்பது நாம் அறிந்த ஒன்று. பத்தாம் வகுப்பு முதல் மேல் வகுப்புகளுக்கு இருக்கும் தமிழ்ப்பாட நூல்களுக்கு ஐயன்பெருமாள் கோனார் உரைகள் எழுதி வெளியிட்டுவந்தார். இவ்வுரைகள் மாணவர்க்கும் ஆசிரியருக்கும் பெருந்துணையாக அமைந்தன இவ்வுரைகள் மாணவரிடைப் பெரும் வரவேற்புப்பெற்றன. நாளடைவில் மற்றப் பாடநூல்களுக்கான (—வரலாறு அறிவியல், ஆங்கிலம், கணக்கு —போன்ற) உரைகளும் 'கோனார்' உரை என்றே அழைக்கப்படலாயின. இதைக் கொண்டு ஐயன்பெருமாள் கோனார் தம் உரைகளின் செல்வாக்கை நாம் அறிய முடியும்.

பைந்தமிழ்ப் புலவராகிய 'கோனார்' வேறு சில நூல்களுக்கும் உரை எழுதினார். அவற்றில் ,தமிழ்ச் செல்வம்' என்பது ஒன்று வாக்குண்டாம், வெற்றி வேற்கை முதுமொழிக்காஞ்சி, இன்னா நாற்பது, இனியவை நாற்பது ஆகிய இவற்றின் உரைகளின் தொகுப்பே தமிழ்ச் செல்வம் என்பதாகும். இவரது உரைகள் இனிமையாகவும் எளிய தமிழிலும் மாணவர் படித்துப் புரிந்து கொள்கின்றவாறு அமைந்துள்ளன.

## அ. ஜான் லூயி

ஆங்கிலம் வல்லார். தமிழில் நல்லார். சொற்திறன் மிக்கார். காட்சிக் எளியர். கடுஞ்சொல்லர் அல்லர். நீடுதோறும் இனியர். இலக்கியத்தினை சப்புக் கொட்டிச் சுவைக்கும் இயல்பினர். கல்வித்துறையில் இணை இயக்குநராக இருந்து மனித வளத்தொண்டு செய்தவர். 'எழிலன்' என்னும் பெயரில் எழுத்துலகில் உலாவியவர்.

ஜான் லூயி தமிழிலக்கியங்ககள் பலவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர். பாரதியின் பாடல்கள் பல இவரால் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன. "அழகின் இதழ்கள்" Petals of Beauty என்பது அவ்வாங்கில மொழிபெயர்ப்பு நூலின் பெயராகும் ஜான் லூயி ஒரு சீர்மிகு சிந்தனையாளர் ஆவர் அவர் மழலைகளுக்கும் சிறார்களுக்கும் எதை எதையெல்லாம் சொல்லித்தர மறந்துவிட்டோம். என்பதைக் குறித்து ஆழ்ந்த சிந்தனையுடன் எழுதியதே "கற்கத் தவறிய பாடங்கள்" என்னும் நற்றமிழ் நூலாகும். முந்நூற்று ஐம்பது பக்கங்களைக் கொண்ட இந்நூலினை கல்வியாளர் ஒவ்வொருவரும் படித்த அறிய வேண்டிய கருத்துகள் இதில் பல உள்ளன.

இல்லற இன்பமும் முதியோர் காதலும் ஆகிய இவற்றை ஆராய்வது 'அந்திப் பொழுது' என்னும் இவரது மற்றொரு நூலாகும். நாயனமார் தமிழும் அமுதூறும் ஆழ்வார் தமிழும் இவரது எழுத்துகளுக்கு அழகும் உயிர்ப்பும் நல்குகின்றன.

சரளமாக ஆங்கிலத்திலும் தமிழிலும் பேச வல்ல இவர் ஒரு புத்தகப் பிரியர். பல்துறையிலும் கற்றுத் துறைபோகிய அ. ஜான் லூயி ஒரு நடமாடும் பல்கலைக் கழகம் என்றே கூறிவிடலாம்.

# துரை. மாலிறையன்

குழந்தை எழுத்தாளர் வரிசையில் சிறப்புற்று விளங்கு பவர் நாராயணசாமி. இவர் தம்பெயரைத் தமிழாக்கி மாலிறையன் என வைத்துக் கொண்டார். தமிழாசிரியராகப் பணியாற்றும் இவர் குழந்தைகளுக்கு ஆயிரம் பாடல்களுக்கு மேல் எழுதியிருக்கிறார். மரபுக் கவிதைகளையே விரும்பிப் பாடும் இவர் கவிதைகள் மழலையர்களுக்கும்சிறுவர்களுக்கும் மன எழுச்சியைத் தரவல்லன.

இவர் தமிழ் வளம் பெறக் குழந்தை இலக்கியத் துறையில் பல சாதனைகள் புரிந்திருக்கிறார். ஜவஹர்லால் நேரு, டாக்டர் அம்பேத்கார், பாவேந்தார் பாரதிதாசன், அன்னை தெரசா ஆகியோர் வரலாறுகளைக் குழைந்தைகளுக் கென்றே பாவில் வடித்துத் வந்தது பாராட்டிற்குரியது. நேரு காவியம், டாக்டர் அம்பேத்கார் காப்பியம் பாவேந்தர் காப்பியம் அன்னை தெரிசா (காப்பியம்) என அந்நூல்கள் பெயர் பெறும். இவரது அன்னை தெரிசா காப்பியம் முழுமையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப் பட்டு வெளி வந்திருக்கிறது. இந்நூல்கள் தமிழ்நாடு, புதுச்சேரி அரசு களின் பரிசுகளை (முதற்பரிசு)ப் பெற்றிருக்கின்றன. மாலிறையன் இயற்றிய ''அருள் நிறை மாரியம்மை காப்பியம்'' 4745 விருத்தங்களைக் கொண்டது. ஆசிரியரு டைய கவித்திறன், மொழித்திறன் இக்காப்பியத்தில் அழகுற வெளிப்படுகிறது.

தேன் பூக்கள், சிரிக்கும் இளம்பிறை கதைகளில் அறிவியல் புதிர்கள், அறிவியல் விடுகதைகள் காதற்களிகள் (குறுங்காப்பியம்) போலும் பல நூல்கள் இவரால் எழுதப் பட்டுள்ளன. குழந்தை இல்க்கியத்துறைக்குக் கிடைத்த ஒரு பரிசு என துரை. மாவிறையனைக் குறிப்பிடுவது பொருந்துவதே

## சிவ. கண்ணப்பா

தமிழுக்குத் தொண்டு பலவகையில் செய்யலாம். தமிழை வளப்படுத்த நூல்கள் எழுதுவதும் கலைச்சொற்கள் புதிது புதிதாகப் படைப்பதும், அகர முதலிகள் தொகுப்பதும் இப்படிப் பல வழிகள் உண்டு. இவற்றிற்கு ஒப்பவே தமிழை வளர்ப்பதற்கு. ஊக்கமும் உற்சாகமும் ஏற்படுத்தி அதற்குரிய களம் அமைத்துக் கொடுப்பது சாலச் சிறந்த தமிழ்த் தொண்டாகும். அத்தொண்டினைத் தொய்வின்றித் தமது எழுபத்தைந்தாண்டு முதுமையிலும் இயற்றி வருபவர் ‘செந்தமிழ்த் தொண்டர்’ சிவ. கண்ணப்பா ஆவர்.

கரிய நெடுமாலென உயர்ந்த உருவம். பரிவும் பாசமும் உடைய கண்கள். பண்போடு பழகும் இயல்பு. திருநீறு துதைந்த நெற்றி. நெஞ்சம் கசியும் படியான இனிய பேச்சு எறும்பு போல உழைக்கும் பெற்றி இவை தொக்க தொகையே சிவ. கண்ணப்பா.

தமிழிலும் பிரஞ்சு மொழியிலும் நல்ல புலமை உடையவர். பெருஞ்செல்வரால் மதிக்கப்படுபவர். எளிய ரால் துதிக்கப்படுபவர். பள்ளி ஆசிரியராக இருந்தவர். இவர் ம. பொ. சிவஞானத்தின் தமிழரசுக் கழகத்தைப் புதுச்சேரியில் வளர்த்தவர். பரந்த தேசியக் கண்ணோட்டம் உடையவர். பல இளைஞர்களை ஊக்குவிக்கும் இயல்பினர்.

சிவ. கண்ணப்பா எழுதிய நூல்கள்: ஜாதிப் பற்று (நவீனம்) மாணவர் இலக்கணம், கவிஞர் சவரிராயலு (வரலாறு) முப்பது நாட்களில் பிரஞ்சு என்பன. இவர் பொதுநல மன்றங்கள், இலக்கியக் கழகங்கள் போன்ற பல இயக்கங்களில் பங்கு கொண்டு தொண்டாற்றி வருகிறார்.

ஓடோடிச் சென்று பிறருக்கு உதவிடும் சிவ கண்ணப்பா பாவேந்தருக்கு மிக நெருக்கமாக இருந்தவர் என்பதை மறந்திடல் வேண்டா

இவர் பாரதி பாடல்கள் பலவற்றைப் பிரஞ்சு மொழியில் தந்திருக்கிறார். பிரஞ்சு இலக்கணம், தமிழிலக்கணம் என்னும் தலைப்பில் ஓர் ஒப்பாய்வு செய்தது புதுச்சேரி வானொலியில் வந்தது. இந்திய மொழிகளில் முதன் முதல் தமிழில் விளையாட்டு விளக்கவுரை (Running Comentry) தந்து சிறப்படைந்தவர் இவர்.

சிவ. கண்ணப்பாவின் பேரில் வாழ்க நீ எம்மான், அரிமதி வெண்பா என்னும் இரு நூல்களைப் பாடித் தந்தவர் அரிமதி தென்னகன் என்னும் பலரும் புகழும் கவிஞர் ஆவர். காரை. இறையடியான் சிவ கண்ணப்பாவைப் புகழ்ந்து 'செந்தமிழ்த் தொண்டர் ஆற்றுப்படை' என்னும் சிற்றிலக்கியமும் படைத்தளித்துள்ளார். பிரஞ்சு மொழியில் பி ஏ. (Baccalaureat) வரை படித்த இவர் இலண்டன், இலங்கை, ஜெனிவா, மலேசியா, சிங்கப்பூர் ஆகிய வெளி நாடுகளுக்குச் சென்று வந்துள்ளார். தமிழ் மொழிக்கு இவரைப் போன்றோர் தொண்டு தொடர்ந்து வேண்டற்பாலதே.



# பிரபஞ்சன்

தமிழ் வித்துவான் ஒருவர் சாகித்திய அகாடமியின் விருது பெறுவது தமிழர்களுக்குப் பெருமை தருவதொன்றாகும். பிரபஞ்சன் நூலான 'வானம் வசப்படும்' என்பதற்கு சாகித்திய அகாடமியின் விருது கிடைத்ததுதான் இங்குக் குறிப்பிடப்படுகிறது.

சா. பிரபஞ்சன் புதுச்சேரி மாநிலத்தைச் சேர்ந்த ஓர் எழுத்தாளர். தமிழில் சிறுகதை, நாவல், நாடகம் ஆகிய துறைகளில் பல நூல்கள் எழுதிய இவர் ஒரு நல்ல சிந்தனையாளர். இவருடைய நூலான "ஒரு ஊரில் ரெண்டு மனிதர்கள்" "நேற்று மனிதர்கள்" ஆகியவை தமிழக அரசின் பரிசுகளைப் பெற்றிருக்கின்றன. "மகாநதி" என்பது கஸ்தூரி ரங்கம்மாள் பரிசையும் "ஆண்களும் பெண்களும்" என்பது புதுச்சேரி அரசின் பரிசையும் பெற்றுள்ளமை சிறப்புக்குரியதாகும். 'மானுடம் வெல்லும்' என்னும் நூலும் "பிருமம்" என்னும் சிறுகதைத் தொகுப்பும் இலக்கியச் சிந்தனையின் பரிசுகளைப் பெற்றிருக்கின்றன. பிரபஞ்சன் தமிழக முன்னணி இதழ்களில் தொடர்கதைகளும் சிறுகதைகளும் எழுதி வருகிறார். இவரது சிறுகதைகள் ஏழு தொகுதியும் நாவல் ஏழும் நாடகத்தொகுதி ஒன்றும் வெளி வந்திருக்கின்றன.

நாட்குறிப்பு எழுதினதால் புகழ் பெற்ற புதுவை ஆனந்தரங்கம் பிள்ளையின் நாட்குறிப்புகளை அடிப்படையாகக் கொண்டு எழுதிய 'வானம் வசப்படும்' என்னும் நாவலுக்குத்தான் சாகித்திய அகாடமியின் பரிசு கிடைத்திருக்கிறது. இவர் புதுவைக்குப் புகழ் சேர்த்த புகழ்மணிகளில் ஒருவர் என்பது சிறப்பு.

## பாண்டித்துரைத் தேவர்

அரசர்கள் போன்றோர் மக்களில் கல்வி கேள்வியால் உயர்ந்த புலவர்களுக்குக் கொடுப்பது 'கொடை' எனப்படும். சங்ககாலந் தொடங்கி இருந்து வருகின்ற இம்மரபினைப் பிசகாது பின்பற்றியவர் பாண்டித்துரைத் தேவர் என்னும் பெருந்தமிழர். சேதுபதிகள் சமஸ்தானத்தில் பாஸ்கர சேதுபதி என்பவர் அரசோச்சி வந்த காலத்தில் அவர்தம் அமைச்சராக இருந்த பொன்னுசாமித் தேவர் என்பார் தம் மகனாகத் தோன்றியவர் பாண்டித்துரைத் தேவர் ஆவர்.

மன்னர் பாஸ்கர சேதுபதியும் அமைச்சர் பொன்னு சாமித் தேவரும் தமிழார்வம் மிக்கவர்கள். தமிழ்ப் புலவர்கள் என்றும் இவர்களைச் சூழ்ந்திருப்பர். அக்காலத்து சமஸ் தானப் புலவராக இருந்தவர் பெரும் புலவரும் நுண்ணறிவும் மிக்கவராகிய ரா. இராகவய்யங்கார் என்பவர் ஆவர். இந்தச் சூழ்நிலையில் வளர்ந்த பாண்டித்துரைத் தேவர் தமிழார்வமும் புலமையும் பெற்றுத் திகழ்ந்ததில் வியப்பொன்றுமில்லை. மு. இராகவய்யங்கார் என்னும் மற்றொரு புலவர் தாம் எழுதிய ''செந்தமிழ் வளர்த்த தேவர்கள்'' என்னும் நூலில் சேதுபதி சமஸ்தானமும் தேவர்களும் வளர்த்த தமிழினை விதந்து எழுதுகிறார்.

பாண்டித்துரைத் தேவரே மதுரைத் தமிழ்ச் சங்கத்தைத் தோற்றுவித்தவர். (1901) இதுவே நான்காம் தமிழ்ச் சங்கம் என அழைக்கப்பட்டது. அச்சங்கத்தின் சார்பில் 'செந்தமிழ்' என்னும் திங்களிதழும் (1902) தொடங்கப்பட்டது. இவ்விதழின் ஆசிரியராக ரா. ராகவய்யங்காரே இருந்தார். தமிழ் வளரவும் வளமாகவும் இவ்விதழ் உதவியது மறுக்க முடியாத ஓர் உண்மையாகும். நான்காவது தமிழ்ச்சங்க நடவடிக்கைகள் முதலில் ஆங்கிலத்தில் தான் இருந்தது,

இதனைச் சுப்பிரமணிய சிவா கண்டித்திருக்கிறார். இந்நடவடிக்கைகள் தமிழில் நடக்குமாறு செய்தவர் நமது தேவர் அவர்களே ஆவர்.

இந்தச் சங்கத்துக்குப் புலவர்களை ஆற்றுப் படுத்தும் வகையில் "புலவராற்றுப்படை" என்னும் சிறப்பிற்குரிய இலக்கியத்தை மகாவித்துவான் வ. குலாம் காதிறு நாவலர் யாத்தளித்தது இங்கு நாம் அறிய வேண்டிய ஒரு செய்தியாகும்.

## தமிழவேள் உமாமகேசுவரம் பிள்ளை

நான் 'தமிழ்வேள்' என்னும் பட்டத்துக்குரியவர் மூவரை அறிவேன். ஒருவர் ஸர். பி. டி. ராஜன்; மற்றொருவர் கலைஞர் கருணாநிதி, இன்னும் ஒருவர்தாம் செந்தமிழ்ப் பணி செய்து கிடந்த உமாமகேசுவரம் பிள்ளை. இவர் ஒரு வழக்குரைஞர்.

பாண்டித்துரைத் தேவர் தோற்றுவித்த நான்காம் தமிழ்ச் சங்கம் அமைவதற்குப் பெருங்காரணமாக இருந்தவர் நமது தமிழவேள் உமாமகேசுவரம் பிள்ளை. தமிழை ஓம்பி வளர்த்த பெருமைக்குரியவர் இவர். ஞானியார் அடிகள் சூட்டிய "தமிழ்ப் புரவலர்" என்னும் பட்டத்திற்குரியவர் உமாமகேசுவரம் பிள்ளை.

த. வே. உமாமகேசுவரம் பிள்ளை தஞ்சை கரந்தைத் தமிழ்ச் சங்கத்தைத் தொடங்கிய தமிழன்பர் ஆவர். இவர் தமிழ் ஆராய்ச்சி அறிஞராகவும் விளங்கினார். கரந்தைத் தமிழ்ச்சங்கம் தமிழ் வளர்க்கும் பண்ணையாக விளக்க முறச் செய்தவர் இவரே. தமிழ்ப் புலவர்கள் தமிழில் மட்டிலும் புலமை உடையதாக இருத்தல் கூடாது. பிற துறைகளிலும் சிறப்புப் பெறவேண்டுமெனத் தமிழவேள் விரும்பினார். தனித்தமிழ் வளர்ச்சியில் ஊக்கம் காட்டினார்.

# குமரி அனந்தன்

அனந்த கிருஷ்ணன் என்பது இவர்தம் இயற்பெயர். தேசிய பாரம்பரியத்தில் ஊறித் திளைத்தவர். எப்பொழுதும் இளமைக் காலந்தொட்டு-கதராடை இவரது கரிய மேனியை வெண்ணிறமாக்கிக் காட்டும். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் அறுபதுகளில் தமிழ் எம்.ஏ. படித்தவர். அப்பொழுது பேராசிரியராக இருந்தவர் டாக்டர். அ. சிதம்பரநாதச் செட்டியார் ஆவர்.

குமரி அனந்தன் குமரி மாவட்டத்தைச் சேர்ந்தவர் காங்கிரசு இயக்கத்தில் பெரும்பங்கு கொண்டு தேசத்திற் காக உழைத்து வருபவர். இவரது நெஞ்சம் தமிழ் தங்கிய நெஞ்சம். நல்ல நாவன்மை கொண்டவர். பாரதியார், கம்பர் இலக்கியங்களில் தோய்ந்தவர். கம்பர் விழாக்களிலும் பாரதி விழாக்களிலும் அனந்தன் ஒரு சிறப்புப் பேச்சாளர். கால் கடுக்கக் கால்நடைப் பயணங்கள் மேற்கொண்டவர். தமிழ் நாட்டுச் சட்டப் பேரவையில் உறுப்பினராக இருந்தவர். காங்கிரசு (இ) தமிழ்நாடு பிரிவிற்குத் தலைவராக இருந்தவர்.

இவரது தமிழ்நடை இனிமையும் எளிமையும் கொண்டது. இவரைப் போலவே இவரது மொழிநடையும் 'விர் விர்' என்று சுறுசுறுப்பாக ஓடும். இவர் பல மேனாடு களுக்குப் பயணித்ததைத் தமிழில் சுவைபட எழுதியிருக் கிறார். தமிழில் பயண நூல் இல்லாத குறையை இவரது ''உலக நாடுகளில் ஒரு சில நாட்கள்'' என்னும் நூல் போக்கும். இவரது மற்றொரு சிறப்பான நூல்'' தமிழ் தரும் காட்சிகள்'' என்பது. மேலும் சில நூல்களும் இவர் எழுதியிருக்கிறார். தமிழென்றால் தோள் தட்டி ஆடும் இயல்பு உள்ளவர் குமரி அனந்தன்.

# மு. மேத்தா

மரபுக் கவிதைகளையே பாடி வந்த சிற்பி பால சுப்பிரமணியம், ஈரோட்டுத் தமிழன்பன், 'கவிக்கோ' அப்துல் ரகுமான் போன்றவர்கள் இந்த நூற்றாண்டின் இறுதிக் கட்டத்தில்-கடந்த இருபதாண்டுகளாகப் புதுக் கவிதை என்னும் துறையில் புகுந்து பெரும் படைப்புகள் படைத்து வருகின்றனர். மு. மேத்தா இவ்வரிசையில் தலை சிறந்த இடத்தைப் பெற்று விளங்கி வருகிறார். மாநிலக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகத் திகழும் மு. மேத்தா ஒரு சிறப்புமிக்க கவிஞராவர் இவர் நாவல் துறையிலும் தமிழ் மொழிக்குத் தொண்டு செய்திருக்கின்றார்.

புதுக்கவிதை என்பது தமிழுக்குப் புதிய வரவு எனினும் இதற்குரிய வேர் தமிழிலக்கியத்தில் பழங்காலத்திலேயே உண்டு காரிகை உரையாசிரியர் காட்டும் ''பூத்த வேங்கை வியன்சிறை ஏறி மயிலினம் அகவும் நாடன் நன்னுதற் கொடிச்சி மனத்தகத்தேனே'' என்னும் பாடல் செந் தொடைக்கு உதாரணமாகக் காட்டுகிறார். இப்பாடலில் புதுக்கவிதைக்குரிய கூறுகள் இருப்பதாக நினைக்க வழி யுண்டு. அமெரிக்கப் புலவன் வால்ட் விட்மனைப் பின் பற்றியது தான் பாரதியின் வசன கவிதை என்பதும் சிந்திக்கற்பாலது. புதுக்கவிதையில் சிறுசிறு சொற்கள்—செறிவுடைய சொற்கள் நேருக்கு நேராக உள்ளத்தைத் தொடும்படியாக ஆளப்படுகின்றன. எனவே இப்புதுக் கவிதைகள் தமிழ் மொழியின் வளத்திற்குத் துணை செய்யும்.

நமது மு. மேத்தாவின் புதுக்கவிதைகள் இளைஞரிடைப் பெரும் எழுச்சியைத் தோற்றுவித்திருக்கின்றன. ''கண்ணீர்ப் பூக்கள்'' ''ஊர்வலம்'' ''முகத்துக்கு முகம்'' ''நாயகம் ஒரு காவியம்'' என்பன போன்று முப்பது நூல்களை எழுதி

யிருக்கும். மேத்தா 'சோழ நிலா' என்னும் நாவலுக்கு ஆனந்த விகடன் பரிசு இருபதாயிரம் ரூபாய் பெற்றிருக்கிறார்.

''கவிமன்னன்'', ''புதுக்கவிதை மன்னர்'', ''புதுக் கவிதைத் தாத்தா'' முதலிய பட்டங்களையும் பெற்று விளங்குகிறார். இவர் தமிழக அரசின் 'பாரதிதாசன்' விருதும் பெற்றிருக்கிறார்.

## இதுரீசு மரைக்காயர்

கீழக்கரையைப் பிறப்பிடமாகக் கொண்ட இதுரீசு மரைக்காயர் ஒரு முதுபெரும் எழுத்தாளர். இலக்கிய ஆர்வலர். இவர் பல நூல்களை எழுதி இலவசமாகவே மாநாடுகளிலும் கருத்தரங்குகளிலும் வழங்கும் பெற்றியர்.

''தமிழகத்தில் மார்க்கபோலெலா இபுனுபதுதா'', ''கீர்த்தி மிகும் கீழக்கரை'' ''நானிலம் போற்றும் நன்னகர்'' போன்ற நூல்களின் ஆசிரியர். இவர் சிறந்த பதிப்பாசிரிய ராகவும் தொண்டு செய்துள்ளார் ''சீறாப்புராணம் ''ஆயிரமசாலா'' ''திருமணக்காட்சி'' சூபி ஞானி செய்யது ஆசியா உம்மாவின் மெய்ஞ்ஞானப் பாடல்கள் அலிபாதுஷா காப்பியம் முதலிய நூல்கள் இவரால் பதிப் பிக்கப் பட்டுள்ளன.

சீறாப்புராணத்தின் ஆசிரியராகிய உமறுப்புலவரை ஆதரித்த 'அபுல் காசீம்' என்னும் புரவலர் கீழக்கரையைச் சார்ந்தவ ரென்பது இவரது கருத்தாகும். 'அபுல் காசிம்' மஹ்முதுபந்தர் என்னும் பரங்கிப்பேட்டையைச் சார்ந்தவ ரென இந்நூலாசிரியர் தமது 'சீறாத் தமிழ்' என்னும் நூலில் நிறுவியிருக்கிறார்.

## சிலம்பொலி செல்லப்பன்

இம்மென்னும் முன்னே எழு நூறும் எண்ணூறும் அம்மென்றால் ஆயிரமும் ஆகிய பாடல்களைத் தம் சொற்பொழிவுகளில் கடல்மடை திறந்தாற் போல எடுத்துக் கூறும் பேராற்றல் பெற்றவர் முனைவர் சிலம்பொலி செல்லப்பன் ஆவர். தமிழோடு சட்டமும் பயின்ற செல்லப்பனார் ''இக்காலக் கவிதை உத்திகள்'' என்னும் தலைப்பில் ஆராய்ச்சி செய்து முனைவர் பட்டம் பெற்றார்.

இவர் காட்சிக்கு எளியவர்; இனியவே கூறும் இயல்பினர்; தம்மைத்தாம் வியவாத பெற்றியர்; தமிழுக்குத் தம் நாவாலும் எழுத்தாலும் பணிசெய்து கிடப்பவர். ஆசிரியராகப் பணியேற்று மாவட்டக்கல்வி அலுவலராய் அரசு தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநராய்த் தொண்டாற்றி ஓய்வு பெற்றவர். இவர் உலகத் தமிழ் ஆராய்ச்சிக் குழுமத்தின் இயக்குநராகவும் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் பதிப்புத்துறை இயக்குநராகவும் பல்கலைக்கழகத்தின் பதிவாளராகவும் பணியாற்றியுள்ளார். இரண்டாவது ஐந்தாவது உலகத் தமிழ் மாநாடு மலர் வெளியீட்டு முழுப்பொறுப்பும் ஏற்றிருந்து அழகு மலர்களைத் தொகுத்தார்.

சிலம்பொலி, பெருங்கதை ஆராய்ச்சி பாவேந்தர் ஓர் உலகக் கவிஞர், நெஞ்சை அள்ளும் சீறா முதலான இருபது நூல்களின் ஆசிரியர். இவர் சிலப்பதிகாரம், மணிமேகலை, இராவண காவியம், பாரதிதாசன் பெருங்கதை, சீறாப் புராணம், ராஜநாயகம், சங்க இலக்கியம் ஆகியன பற்றித் தொடர் சொற்பொழிவுகள் ஆற்றிப் புகழ் பெற்றார். ரா. பி. சேதுப்பிள்ளை இவருக்குச் ''சிலம்பொலி'' என்னும்

பட்டத்தினை வழங்கினார். குன்றக்குடி அடிகளார் 'நூலறி புலவர்' என்னும் பட்டம் வழங்கிச் சிறப்பித்தார்.

மலேசியா, சிங்கப்பூர், இலங்கை, ஐக்கிய அறபு குடியரசுகள், மொரீஸியஸ், இங்கிலாந்து ஆகிய நாடுகளுக்கு அந்நாட்டுத் தமிழ்மன்றங்களின் அழைப்பினை. ஏற்றுச் சென்றார்

## வெள்ளையாம் பட்டு சுந்தரம்

சேகர் பதிப்பகத்தின் உரிமையாளர் வெள்ளையாம் பட்டுச் சுந்தரம் செய்த தமிழ்த்தொண்டு ஒரு தனித் தன்மை வாய்ந்தது. வணிக நோக்கைப் பின் தள்ளி, தமிழ்த்தொண்டு புரிவதென்பது ஓர் அரிய செயலாகும். தமிழ்நாட்டுத் திருக்கோயில்களின் கட்டடக் கலை பற்றியும் இதுவரை வெளிவராத கல்வெட்டுகள் பற்றியும் சுந்தரம் அவர்கள் பல நூல்களை வெளியிட்டிருக்கிறார்.

பள்ளிப் படிப்பு சிறிதே உடைய இவர், தம்முயற்சியில் படிப்படியாக உயர்ந்து தமிழ் வளர்ச்சிக்காகப் பாடுபட்டு வருகிறார். 'படிப்புச் செம்மல்' 'வீரப்பதிப்பாளர்' போன்ற விருதுகளைப் பெற்றவர் வெள்ளையாம் பட்டு சுந்தரம். பழைய கல்வெழுத்துகளைப் படிப்பது பற்றியும் இவர் சிந்தனை செய்திருக்கிறார். கல் சொல்லும் கதை என்பது இவரது ஒரு நூலாகும். இதழியல் துறையில் ஈடுபட்டு முற்காலத் தமிழ் இதழ்கள், இந்திய இதழ்கள் முதலான நூல்களும் இவரால் எழுதப்பட்டிருக்கின்றன. தொல் பொருள் ஆய்வாளர்களாகிய பாகூர் சு. குப்புசாமி, வில்லிய நல்லூர் ந. வெங்கடேசன் ஆகிய இவர்களைக் கொண்டு பல கல்வெட்டாராய்ச்சிகளைச் செய்திருக்கிறார். ''கல் சொல்லும் கதைகள்'' என்னும் நூலும் எழுதியிருக்

கிறார் புதிய எழுத்தாளர் பலரைத் தமது சேகரீ பதிப்பகத்தின் மூலம் அறிமுகப்படுத்திய இவர் தேர்ந்த தமிழ் நூல்களையே (Standard Liferature) பதிப்பித்து வெளியிட்டு வருபவர். தெ. பொ. மீ. கா. அப்பாதுரை போன்றவர் ஆங்கில நூல்களும் இவரால் வெளியிடப் பட்டன,

இவர் பதித்த நூல்களுக்கு முகவுரைகள் எழுதினார் அவை பெரிதும் ஆய்வு நோக்குடையவையாகும். புதுவைப் பேரறிஞர் பி. எல். சாமி என்பார் தம் நூல்கள் பலவும் அறிவியலோடு தொடர்புடையவை. சங்க இலக்கியத்திலும் பிறவற்றிலும் வரும் செடி, கொடி, மலர், விலங்குகள், மீன்கள், பறவைகள், மணிகள் ஆகிய இவற்றை அறிவியல் தன்மையோடு பி. எல். சாமி எழுதிய நூல்களை சுந்தரம் வெளியிட்டுத் தமிழுக்கு நற்பணி இயற்றினார். பனைமலை கல்வெட்டுகள், வில்லியனூர் கல்வெட்டுகள் போன்றவை இவரது உந்துதலால் வெளிவந்திருக்கின்றன. தஞ்சை பெரிய கோயிலின் சிறப்புகள் பற்றி இவர் எழுதிய நூல் ஒரு பெரிய அரிய தொண்டாகும். இவரது 'இதழியல் நோக்கு' மதுரைப் பல்கலைக்கழகத்தில் பாடமாக வைக்கப் பட்டது. இவர் எழுதிய கவிதைகள் ''வண்ணக் களஞ்சியம்'' என்னும் பெயரில் நூலாக வெளிவந்துள்ளது. இவர் மாணவருக்கும் ஆசிரியருக்கும் பல நூல்கள் எழுதியிருக் கிறார்.

அரிக்கமேடு அகல் ஆராய்ச்சி பற்றிய விளக்க நூல் இவரால் எழுதப்பட்டுள்ளது. வெள்ளையாம் பட்டு சுந்தரம் காட்சிக்கு எளியர்; செயல்வீர, நீடுதோறும். இனியர். மென்சாயல் நல்லார் இவரைப் போல பலர் தமிழ் வளர்ச்சிக்கு இன்னும் தேவைப்படுகின்றனர்.

# ஆப்ரஹாம் பண்டிதர்

1940 ஆம் ஆண்டுக்குப் பின் ஐம்பதுகளில் தமிழிசை இயக்கம் தோன்றித் தமிழிசைக்காகப் பெரும்படை திரண்டு எழுந்தது. அண்ணாமலை அரசர், கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை, ஸர். ஆர். கே. சண்முகஞ் செட்டியார் போன்ற பெருமக்கள் இத்தமிழிசை இயக்கத்திற்குப் பக்க பலமாக இருந்து மாநாடுகளையும் கருத்தரங்குகளையும் நடத்தி வந்தனர். இத்தமிழிசை இயக்கம் உருக்கொண்டு வளர்வதற்கு முன்பே தமிழிசையைப்பற்றி ஆராய்ச்சிகள் நடைபெற்றன. விபுலானந்த அடிகளாரும் ஆப்ரஹாம் பண்டிதர் என்பாரும் தமிழிசை பற்றி ஆராய்ச்சிகள் செய்தனர். ஆப்ரஹாம் பண்டிதர் விபுலானந்தருக்கு முன்னோடியாக தமிழிசையில் ஆர்வம் கொண்டு பல ஆய்வுகள் செய்தார்.

ஆப்ரஹாம் பண்டிதர் குற்றாலத்தின் அருகே வடகரை சாம்புவனோடை என்னும் சிற்றூரில் ஒரு கிறித்துவ குடும்பத்தில் 1859 ஆம் ஆண்டு தோன்றினார். எட்டாவது வரையில் படித்த இவர் ஆசிரியராகப் பணியாற்றினார். கலைகளில் ஆர்வமுடைய இவர் ஆங்கிலம் தமிழ் வடமொழி ஆகிய மொழிகளைக் கற்றுப் புலமை பெற்றார். சித்த மருத்துவத்திலும் கோள் நூல், மனை நூல் ஆகியவற்றில் தேர்ந்தார்.

இசையில் ஆர்வமுடைய ஆப்ரஹாம் பண்டிதர் வடமொழியிலும் தமிழிலும் இருந்த இசை நூல்களைக் கற்று அவற்றை ஆராய்ந்து வந்தார் இவர் சித்த வைத்தியத்தில் கவனம் செலுத்தி சுருளிமலையில் இருந்த கருணாநந்தர் என்னும் சித்தரிடம் பச்சிலை, மூலிகைகளைக் கொண்டு சித்த மருந்துகளைத் தயாரித்து அந்த மருத்துவத் தைத் தொழிலாகக் கொண்டு பெரும்பொருள் ஈட்டினார்.

தஞ்சையில் 'கருணாநிதி வைத்திய சாலை' என ஒரு மருத்துவ மனை ஏற்படுத்தி மருத்துவத் துறையில் தீவிரமாக ஈடுபட்டார்.

சித்த வைத்தியம் செய்து தான் ஈட்டிய பெரும் பொருளை இசைத்தமிழாராய்ச்சிக்குச் செலவிட்டார். 1912ஆம் ஆண்டிலிருந்து 1917ஆம் ஆண்டு வரை தமது சொந்த செலவில் ஏழு இசை மாநாடுகளை நடத்தினார். தஞ்சையில், 'சங்கீத வித்தியா மகாஜன சங்கம்' எனவொரு அமைப்பினை ஏற்படுத்தி இசை ஆராய்ச்சி செய்து வந்தார். அவர் சொற்பிழை, சுரப்பிழை, தாளப்பிழை எதுவும் இல்லாமல் தமிழில் பாடல்களைப் பாடவேண்டும் எனப் பல பாடல்களை இயற்றினார். அப்பாடல்கள் 'கருணாமிர்த சாகரத் திரட்டு' எனும் பெயரில் நூலாக வந்தது. இவ்வாறு தமிழிசைக்குப் பலவாறாகத் தொண்டுகள் இயற்றிய பண்டிதர் அத்துறையில் 15 ஆண்டுகள் உழைத்து 1346 பக்கங்களில் ''கருணாமிந்த சாகரம்'' என்னும் நூல் வெளியிட்டார் இந்த நூலுக்குப் புலிசை ஞானியாரடிகளும் மறைமலை அடிகளாரும் பாயிரம் அளித்துச் சிறப்பித்து உள்ளனர். தமிழிசை இயக்கத்திற்கு முன்னோடியாக ஆபிரகாம் பண்டிதர் இயற்றிய கருணாமிர்த சாகரம் என்னும் இந்நூல் பண்டிதர் தம் அயராத உழைப்பிற்கு ஒரு சான்றாகும் இயலிசைத் துறைகளில் வல்லவராகிய ஆப்ரகாம் பண்டிதரைத் தமிழர்கள் போற்றிக் கொண்டாட வேண்டும்.

## மணவை முஸ்தபா

உயர்தனிச் செம்மொழியாகிய அறபி மொழியில் தமிழ்நாட்டு முஸ்லிம்கள் புலமை எய்தி பல இலக்கியங் களைப் படைத்தது போல தம் தாய்மொழியாகிய சிந்தைக்கினிய செந்தமிழிலும் புலமை உடையவர்களாய்த் திகழ்ந்து பல இனிய படையல்களைத் தந்து தமிழ்மொழிக்குத் தொண்டுகள் செய்திருக்கிறார்கள். இந்த நூற்றாண்டிலும் காலத்திற்குத் தேவையான தமிழ் வளர்ச்சிக்குப் பல தொண்டுகள் இயற்றி வருகிறார்கள். அவ்வாறு தமிழுக்கு அணி சேர்க்கும் வகையில் தொண்டியற்றி வருபவர்களில் ஒருவர்தாம் மணவை முஸ்தபா என்னும் அறிஞராவர்.

எல்லாம் தமிழில் இருக்கிறது என்று சொல்லிப் பழைமை கதைகளைப் பேசித் திரியாமல் காலத்தின் தேவைகளை உணர்ந்து தமிழுக்கு வளம் சேர்த்துவரும் மணவை முஸ்தபா திண்டுக்கல் மாவட்டம் பிலாத்து என்னும் ஊரில் 15 – 06 - 1935 ஆம் ஆண்டில் பிறந்தார். தமது கல்லூரிப் படிப்பை முடித்துக் கொண்டு அலுவல் பார்த்து வந்த அவர் 1956 ஆம் ஆண்டு முதல் தம்மைத் தமிழ்ப் பணிக்கு ஆட்படுத்திக் கொண்டார். தமிழ் ஓர் இலக்கிய மொழி; அறிவியல் மொழியாக இருக்கமுடியாது என்பவர் கூற்றை மறுத்துத் தமிழ் ஓர் அறிவியல் மொழி. தமிழில் எதையும் கூறமுடியும் எழுதமுடியும் என்று அறைகூவல் விடுத்து அத் துறையில் உழைக்க முயன்றார். தென் மொழிகள் புத்தக நிறுவனத்தின் தமிழ்நூல் பதிப்புப் பணியை ஏற்று 120 தமிழ் நூல்களைப் பதிப்பித்தார். அவற்றுள் 65 நூல்கள் அறிவியல், மருத்துவம், தொழில்நுட்ப நூல்களாகும். 'புத்தக நண்பன்' மாத இதழின் பொறுப்பாசிரியராகவும் பணி ஆற்றியிருக் கிறார், 1966 முதல் உலகப் பண்பாட்டு (யுனஸ்கோ) இயக்கத்தின் 'கூரியர்' இதழின் தமிழ்ப் பதிப்பினைத்

தொடர்ந்து வெளியிட்டு வரும் முஸ்தபா 'தமிழரின் வாழும் பண்பாடு' என்னும் தலைப்பில் எழுதப்பட்ட நூல் உலக 27 மொழிகளில் வெளிவருவதற்கு அரும்பாடு பட்டார். சூரியரின் இந்தச் சிறப்பிதழ் 1987 – ல் வெளியிடப்பட்டது.

இவருக்கு ''அறிவியல் தமிழ்ச் சிற்பி' என்னும் விருதினைச் சூட்டி டாக்டர் கலைஞர் ஆற்றிய உரையில் ''இந்த மரியாதை உழைப்புக்குக் கிடைக்கின்ற மரியாதை, உண்மைக்குக் கிடைக்கின்ற மரியாதை அவருடைய ஆர்வத் திற்குக் கிடைக்கின்ற மரியாதை தமிழ் மேலும் வளர வேண்டும், முன்னேற வேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்டு இடையறாது பாடுபடுகிறாரோ அந்தப் பணிக்குக் கிடைக்கின்ற மரியாதை'' எனப் பாராட்டினார் ''தமிழ் ஆற்றல் மிக்க அறிவியல் மொழி' என்பதைச் செயல்படுத்திக் காட்டி வருகின்றார் இந்த அறிவியல் தமிழ்ச் சிற்பி. பல ஆயிரம் கலைச் சொற்களை மணவையார் உருவாக்கியிருக் கிறார்.

திரு மணவை முஸ்தபா முப்பதுக்கு மேற்பட்ட பரிசு களை மாணவர் பருவத்திலேயே பெற்றவர். இவர் பாரதீய ஞானபீட பரிசு நூல் தேர்வுக்குழு உறுப்பினராகவும் பணி யாற்றி யிருக்கிறார். 1977 முதல் 1986 வரை திரைப்படத் தணிக்கைக் குழு உறுப்பினராகவும் 1992 முதல் 1974 வரை சென்னையில் கௌரவ மாகாண மாஜிஸ்திரேட்டாக வும் பணியாற்றியிருக்கிறார்.

இவர் பல விருதுகளையும் பட்டங்களையும் பெற்றிருக் கிறார். தமிழ்நாடு அரசின் 1985க்கான கலைமாமணி விருதினையும் 1989 இல் திரு. வி க விருதினையும் பெற்றார். தமிழ்நாடு கூட்டுறவு அதிகாரிகள் மன்றம் இவருக்குத் தமிழ்த் தூதுவர்' என்னும் பட்டம் வழங்கிச் சிறப்பித்தது. 'வளர்தமிழ்ச் செல்வர்' என்னும் பட்டத்தை 1987 இல்

சிந்தனையாளர் கழகம் அளித்து மகிழ்ந்தது. 1994 ஆம் ஆண்டுக்குரிய சிறந்த மொழி பெயர்ப்பாளர்க்கான விருது தமிழ்நாடு அரசால் வழங்கப்பட்டது 'புகழ் பூத்த தமிழர்' அறிவியல் தமிழ் வித்தகர், 'அறிவியல் தமிழேறு' முத்தமிழ் வித்தகர் ஆகிய சிறப்புப் பட்டங்களுக்குரியவரான இவருக்கு ராஜா சர் முத்தையா செட்டியார் விருதும், அண்ணாமலை அரசர் அறக்கட்டளை பரிசும் (ரூ 50,000) வழங்கப்பட்டது. ஆழ்வார் ஆய்வு மையம் ரூ 25,000 பரிசும் தங்கத் தாமரைப் பாராட்டுப் பட்டயமும் 1996 இல் வழங்கப் பட்டது.

பேராற்றல் உடைய பெரும்தமிழ்ப் புலமை சான்ற மணவை முஸ்தபா ஒரு நிறுவனமாகவே நின்று 37 நூல்களை வெளியிட்டுள்ளார். மொழிபெயர்ப்பு நூல்களும் தொகுப்பு நூல்களும் இவற்றில் அடங்கும்.

மாணவையார் தனி நபராக நின்று எழுதிய நூல்களில் சில:

1. அறிவியல் கலைச்சொல் களஞ்சியம் பாகம் 1+2
2. மருத்துவ, அறிவியல்' தொழில் நுட்பக் கலைச் சொல் களஞ்சிய அகராதி.
3. காலம் தேடும் தமிழ்
4. இளையர் அறிவியல் களஞ்சியம்
5. வலம் வந்த உலகம்
6. அன்றாட வாழ்வில் அழகு தமிழ்
7. மருத்துவக் கலைச் சொல் களஞ்சியம்

மணவை முஸ்தபாவை இளமைக் காலம் முதல் அறிந்த இவரது நண்பர் திரு இரா நடராசன் அவர்கள் இவரது தமிழ்க் காதலையும் தமிழ்த் தொண்டினையும் இவரது உழைப்பு, கொள்கை ஆகியவைபற்றியும் விரிவாக நானூறு பக்கங்

களுக்கு மேல் காலம் தேடிய தமிழனின் அறிவியல், தமிழ், வரலாறு என்னும் நூலொன்று எழுதியிருக்கிறார். தமிழ் எழுத்தாளரைப் பற்றிய நூலோன்று இதுவரை வெளிவர வில்லை என்பது குறிப்பிடத் தக்கது பல்கலைக் கழகங்களில் பணியாற்றும் பேராசிரியர்கள் செய்யாத ஒன்றை மணவை. முஸ்தபா செய்திருக்கிறார். தமிழ் மக்கள் இவருக்கு நன்றி கூற கடமைப்பட்டிருக்கிறார்கள்.

## க. சச்சிதானந்தம்

பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்களைத் தமிழ் மொழிக்குக் கொண்டு வருதல் வேண்டுமென்பது பாட்டுக் கொரு புலவன் பாரதியின் விருப்பம். இக்காத்தில் பலர் அத் துறையில் தமிழுக்குத் தொண்டு புரிந்து வருகிறார்கள். அவர்களில் ஒருவர்தாம் க. சச்சிதானந்தம் என்னும் நல்லறிஞர்.

ஜவுளி கணேசன் - செல்வாம்பாள் என்பவருக்கு 30 11.1930 ஆம் ஆண்டு தோன்றி இவர் கடந்த முப்பது ஆண்டுகளுக்கு மேல் தமிழ்ப் பணி செய்து கிடக்கிறார். பிரஞ்சு மொழியில் பி. ஏ வரை படித்த இவர் தமிழில் எம். ஏ. வரை எட்டிப்பார்த்திருக்கிறார். மேலும் வித்துவான் பட்டமும் பெற்றவர். பெத்தி செமினரில் பிரஞ்சு பிரவே (SSLCக்குச் சமமானது) படித்துக் கொண்டிருக்கும் பொழுது தனித் தேர்வராகத் (Private) தமிழ் பிரவேயும் எழுதித் தேர்வு பெற்றுப் பெருஞ் சாதனை படைத்தார் போனிசு (Bonis) சாமியார் என்னும் வெள்ளைக்கார பாதிரியா ரிடத்துக் கல்விகற்ற இவர் அவராலேலே அரசுப் பணிக்கும் அமர்த்தபட்டார்.

பதினாறு வயதிலேயே எழுத்தார்வம் கொண்ட சச்சிதானந்தம் 'தமிழ் இளைஞன்' என்னும் பெயரில் கையெழுத்து இதழொன்று நடத்தினார்' தமது பதினெட்டாவது வயதில் (1957-52) ஒரு கதைப் புத்தகம் வெளியிட்டார். நடராஜன் என்பவரோடு இணைந்து வடிவ கணித வழிகாட்டி 1952) என்னும் நூலினை வெளியிட்டார். தமிழார்வம் உடைய இவர் கணிதத்திலும் சிறந்து விளங்கினார் என்பது குறிப்பிடத் தக்கது.

'அன்பு வெளியீடு' என்னும் பதிப்பகத்தின் மூலம் பல நூல்களை வெளியிட்டார். மு வ வின் சொல்வின் கதை என்பது அதில் ஒன்றாகும். கலித்தொகை, மனோன்மணீயம், குறுந்தொகை, விக்கிரமாதித்தன் கதை போன்றவற்றை மலிவு பதிப்புகளாக இவர் வெளியிட்டார்.

பிரஞ்சு மொழியில் பெரும்புலமை பெற்ற இப் பேராசிரியர் பதினைந்திற்கும் மேலான மொழி பெயர்ப்பு நூல்களை வெளியிட்டுள்ளார் அவற்றுள் பிரஞ்சு மொழிக் கதைகளும் உண்டு. ''குரங்குக்காடு'' சிவப்புப்பாறை, சின்னஞ்சிறு பிரஞ்சுக் கதைகள், பிரஞ்சு நகைச் சுவைகள் பிரஞ்சு நகை சுவை. முதலானவை அவற்றுள் சில.

இவர் புதுவையில் பெரும் இலக்கணப் புலவராக இருந்த இலக்கணச் செம்மல். சு. குமாரசாமி செட்டியாரிடம் இலக்கணம் கற்றுத் தேர்ந்தார். அரசுப் பள்ளிகளில் 1952 - லிருந்து 1968 வரை ஆசிரியராகப் பணியாற்றி இவர் 1970 முதல் 1988 வரை பிரஞ்சு அரசு புதுச்சேரியில் நடத்தும் பிரஞ்சுக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக இருந்து தமிழ்த் தொண்டு புரிந்தார்.

எப்பொழுதும் எழுதிக் கொண்டே இருக்கும் க.சச்சிதானந்தம் குழந்தை எழுத்தாளராகவும் திகழ்கின்றார்.

சங்கர், பரிசு போன்ற குழந்தைகளுக்கான கதைப் புத்தகங்களும் எழுதியிருக்கின்றார். தமிழ்ச்செல்வி என்னும் இதழுக்கு ஆசிரியராகவும் இருந்து பணியாற்றியுள்ளார். பொருள்வகை அகராதி, பிரஞ்சு கற்றுக் கொள்ளுங்கள், பிரஞ்சு சிந்தனைகள் என்னும் நூல்கள் வெளிவரயிருக்கின்றன.

மாணவர்களுக்குக் கட்டுரை எழுவது எப்படி என்பது பற்றி நூல் யாத்திருக்கிறார். பிரெஞ்சு ஆட்சியில் தமிழின் நிலை என்னும் இவரது நூல் இவர் எடுத்துக் கொண்ட உழைப்பிற்கு ஓர் எடுத்துக் காட்டாம். ஏறத்தாழ நூற்றைம்பது (150) ஆண்டுகள் தொடர்ந்து நடைபெற்ற பிரஞ்சு ஆட்சியில் தமிழ் மொழியின் நிலை எப்படி இருந்தது என்பதை இந்த நூலில் ஆசிரியர் விரிவாக எழுதியிருக்கிறார்.

பிரஞ்சுக் காரர்கள் தமிழ் வளர்ச்சிக்கு இடம் கொடுத்தார்கள். இந்தியாவை விட்டுச் சென்ற பிறகும் தமிழுக்குப் பாடுபட்டு வருகிறார்கள் என்பது காண நாம் மகிழ்ச்சியடையலாம். க. சச்சிதானந்தம் போன்ற தமிழ்க் காவலர்களை நாம் மறக்கலாமா?

---

## ஆசிரியரின் பிற நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | சீறாத் தமிழ் | 40-00 |
| 2. | இப்படியும் நடந்தது | 25-00 |
| 3 | வானில் மிதந்த தமிழ் | 20-00 |
| 4. | தீன் தீந் தமிழ் | 16 00 |
| 5. | நாகூர் ஆண்டவர் பேரிற் கும்மி | 10-00 |
| 6. | அல்லாஹ் போற்றித் திருவகவல் | 6-00 |
| 7. | குழந்தை மலர்கள் (புதுவை அரசின் நேரு இலக்கிய விருது பெற்றது) | 32-00 |
| 8. | இருபதாம் நூற்றாண்டில் தமிழ் வளர்த்த பெரியோர்கள் (பாகம் ஒன்று) | 32-00 |

கழிவு: பள்ளிகளுக்கு 25 விழுக்காடு உண்டு.

# இருபதாம் நூற்றாண்டில் தமிழ் வளர்த்த பெரியோர்கள்

(பாகம் - 2)





தமிழ்நிலைப் பதிப்பகம்
புதுச்சேரி - 605 004